بسم الله الرحمن الرحيم

# பெண்களுக்கான நபிவழிச் சட்டங்கள்

## பொருளடக்கம்

19. முகத்தை மறைப்பதில் தவறில்லை

20. முக்காடு இல்லாமல் தொழக்கூடாது

21. மஹ்ரமானவர்களுடன் இருக்கும் போது

22. மற்ற பெண்களோடு நடந்துகொள்ளும் முறை.

23. ஆண்களுடன் தனித்திருக்கக்கூடாது

24. பெண்கள் ஜனாஸாவை ஆண்கள் பார்க்கலாம்.

**ஆடை அலங்காரங்கள்**

25. பட்டாடை அணியலாம்.

26. காவிநிற ஆடையை அணியலாம்.

27. ஆண்களைப் போன்று நடக்கக்கூடாது.

28. காது மூக்கு குத்தலாமா?

29. பெண்களுக்கு கத்னா செய்யலாமா?

30. அணிகலன்கள் அணியலாம்.

31. நக பாலீஷ் பூசலாமா?

32. நறுமணம் பூசலாமா?

33. ஒட்டுமுடி வைக்கலாமா?

34. மொட்டை அடிக்கலாமா?

35. பச்சை குத்தலாமா?

36. விதவைப் பெண்கள் அலங்கரித்துக்கொள்ளலாமா?

**திருமணச் சட்டங்கள்**

37. பெண்ணுடைய சம்மதம் தேவை.

38. திருமணப் பொருத்தம்.

39. மஹர் வாங்குதல்.

40. மனைவியின் பொருள் மனைவிக்கே உரியதாகும்

41. கருகமணி மெட்டி திருமணத்திற்கு அவசியமா?

42. மனைவியின் பொறுப்பு என்ன?

43. அலங்கரித்துக்கொண்டு கணவன் முன்னால் வர வேண்டும்.

44. கணவன் அழைக்கும் போது மறுக்கக்கூடாது.

45. அந்தரங்கத்தை வெளிப்படுத்தக்கூடாது.

46. கணவனுக்கு கட்டுப்பட்டு நடக்க வேண்டும்.

47. கணவன் மார்க்கத்திற்கு மாற்றமாகச் சொன்னால்...

48. கணவனின் உறவினர்களுக்கு பணிவிடை செய்தல்.

49. வெளியில் சென்றால் அனுமதி கேட்க வேண்டும்.

50. கணவனுக்குத் தெரியாமல் அவனது பொருளை எடுக்கலாமா?

51. குடும்பக்கட்டுப்பாடு செய்யலாமா?

52. செயற்கை முறையில் கருத்தரித்தல்

53. விவாகரத்து

54. இரண்டு சாட்சிகள்

55. தொலைபேசியில் விவாகரத்துச் செய்யலாமா?

56. விவாகரத்து தொடர்பான குர்ஆன் வசனங்கள்.

57. பெண்களின் விவாகரத்து உரிமை

58. இத்தா.

59. இத்தாவின் போது அலங்கரித்தல் கூடாது.

60. இத்தாவின் போது வெளியில் செல்லலாமா?

61. குழந்தை யாருடைய பொறுப்பில் வளரும்?

62. ஜீவனாம்சம்

63. பெண்களுக்கு சொத்துரிமை உண்டா?

64. பெண்கள் கடைத்தெருக்களுக்குச் செல்லலாமா?

65. தனியாக பயணம் செய்யலாமா?

66. பெண்கள் இஃதிகாஃப் இருக்கலாமா?

67. பெண்கள் மண்ணறைகளுக்குச் செல்லலாமா?

68. கோ எஜுகேஷன் கூடுமா?

69. பெண்கள் வேலைக்குச் செல்லலாமா?

70. பெண்கள் பிராணிகளை அறுக்கலாமா?

## முன்னுரை

ஒரே ஆண் பெண்ணிலிருந்து தான் இந்த உலக மக்கள் அனைவரும் தோன்றினார்கள். இவர்களில் ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் இறைவனுக்குப் பிடித்தமான வாழ்வை வாழ்வதின் மூலமே இறைவனிடத்தில் நெருங்கமுடியும்.

ஆணாக பிறப்பது உயர்வு என்றும் பெண்ணாக பிறப்பது தாழ்வு என்றும் நினைப்பதற்கு இஸ்லாத்தில் அனுமதியில்லை. இறைத்தூதரின் மகனாக இருந்தாலும் முறையான வாழ்வை வாழாவிட்டால் அவன் இறைவனிடத்தில் மட்டமானவனாகிறான். கொடுங்கோலனுடைய மனைவியாக இருந்தாலும் இறைவனுக்கு உவப்பான காரியங்களை செய்தால் அவள் இறைவனிடத்தில் மதிப்புமிக்கவளாகிறாள்.

ஒரு காலத்தில் தாழ்வாக கருதப்பட்டப் பெண்களை கண்ணியப்படுத்துவதற்காக பெண்கள் இந்நாட்டின் கண்கள் என்றெல்லாம் கூறி பொதுவாக எல்லாப் பெண்களையும் சிறப்பித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் இஸ்லாம் எல்லாப் பெண்களும் சிறப்புக்குரியவர்கள் என்றக் கருத்தை ஒத்துக்கொள்ளவில்லை.

மாறாக இஸ்லாம் காட்டிய வழியில் நடக்கும் நற்குணமுள்ள பெண்களே தங்கம் வெள்ளி வைரம் முத்து பவளம் வைடூரியம் போன்ற உலகில் கிடைக்கும் விலையுயர்ந்த பொருட்கள் அனைத்தையும் விட மதிப்பிற்குரியவர்கள் என்று இஸ்லாம் கூறுகிறது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இவ்வுலகம் (முழுவதும்) பயனளிக்கும் செல்வங்களே; பயனளிக்கும் இவ்வுலகச் செல்வங்களில் மிகவும் மேலானது, நல்ல மனைவியே.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (2911)**

ஒரு மனிதன் சேமிக்கின்ற சொத்துக்களில் சிறந்ததை உனக்கு அறிவிக்கட்டுமா? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டுவிட்டு அது நல்ல பெண்மனியாகும் என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : அபூதாவுத் (1417)**

மார்க்கமுள்ளப் பெண்னே ஆனுடைய வெற்றிக்குக் காரணமாக இருப்பாள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நான்கு நோக்கங்களுக்காக ஒரு பெண் மணமுடிக்கப்படுகிறாள்:

1. அவளது செல்வத்திற்காக.

2. அவளது குடும்பப் பாரம்பரியத்திற்காக.

3. அவளது அழகிற்காக.

4. அவளது மார்க்க (நல்லொழுக்க)த்திற்காக. ஆகவே, மார்க்க (நல்லொழுக்க)ம் உடையவளை (மணந்து) வெற்றி அடைந்து கொள்! (இல்லையேல்) உன்னிரு கரங்களும் மண்ணாகட்டும்!

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (5090)**

ஒரு பெண் நல்ல பெண்ணாக திகழ வேண்டுமென்றால் இஸ்லாம் காட்டும் வழிமுறைகளை அவள் கடைபிடிப்பதன் மூலமே அவ்வாறு திகழ முடியும். அந்த வழிமுறைகளை ஒவ்வொன்றாக விளக்கி வெற்றிக்கு வழிகாட்டுவதே இந்நூலின் நோக்கம்.

இஸ்லாத்தில் பெரும்பாலான சட்டத்திட்டங்கள் ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொதுவானவை. என்றாலும் இரு சாராரின் உடற்கூறுகள் குணங்கள் பலவீனங்கள் பொறுப்புகள் ஆகியவற்றை கவனத்தில் கொண்டு தனித்தனியான சட்டங்களையும் நபி (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

அவ்வாறு பெண்கள் குறித்து நபி (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்திய விஷயங்கள் ஆதாரத்துடன் இப்புத்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதில் தவறு ஏதும் இருந்தால் நம் கவனத்திற்குக் கொண்டுவரப்படும் போது இன்ஷா அல்லாஹ் திருத்திக்கொள்வோம். அல்லாஹ் மிக அறிந்தவன்.

**அன்புடன்**

**s . அப்பாஸ் அலீ m.i.sc**

**மாதவிடாச் சட்டங்கள்**

மாதவிடாய் என்பது அல்லாஹ் பெண்களுக்கு ஏற்படுத்திய ஒரு தொல்லையான நிலையாகும். அந்நிலையில் சில விஷயங்களை இஸ்லாம் கடைபிடிக்கச் சொல்கிறது. அவற்றைக் காண்போம்.

மாதவிடாய் ஏற்பட்டுள்ள பெண்கள் நான்கு காரியங்களை செய்வதை விட்டும் தடுக்கப்பட்டுள்ளார்கள். இந்த நான்கு காரியங்களை மாதவிடாயிலிருந்து தூய்மையானப் பிறகே அவர்கள் செய்ய வேண்டும்.

**தொழுகையை விட்டுவிட வேண்டும்**

மாதவிடாய் ஏற்படும் போது தொழுகையை விட்டுவிடு. மாதவிடாய் நின்ற பின்பு குளித்து விட்டுத் தொழுது கொள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (228)**

"மார்க்த்திலும் அறிவிலும் எங்களுடைய குறைபாடு என்ன, அல்லாஹ்வின் தூதரே?" என்று பெண்கள் கேட்டார்கள். "பெண்களின் சாட்சியம் ஆண்களின் சாட்சியத்தில் பாதியளவு அல்லவா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்க, அப்பெண்கள், "ஆம் (பாதியளவுதான்)" என்று பதிலளித்தார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அதுதான் அவளது அறிவின் குறைபாடாகும்:" என்று கூறிவிட்டு ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் ஏற்பட்டால் (தூய்மையாகும் வரை) அவள் தொழுவதில்லை; நோன்பு நோற்பதில்லை அல்லவா?" என்று கேட்க, மீண்டும் அப்பெண்கள் "ஆம் (தொழுவதில்லை; நோன்பு நோற்பதில்லை)" என்று பதிலளித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் அதுதான் அவளது மார்க்கத்தி(ன் கடமையி)லுள்ள குறைபாடாகும்" என்று கூறினார்கள்

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : புகாரி (304)**

**மாதவிடாயின் போது விட்டத் தொழுகைகளை திரும்பத் தொழ வேண்டியதில்லை.**

எங்களுக்கு அது (மாதவிடாய்) ஏற்பட்டது. அப்போது விடுபட்ட நோன்பை (மாதவிடாய் நின்ற பிறகு) மீண்டும் நோற்குமாறு நாங்கள் கட்டளையிடப்பட்டோம். விடுபட்டத் தொழுகைகளை தொழுமாறு கட்டளையிடப்படவில்லை.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (508)**

**நோன்பு நோற்கக் கூடாது**

மாதவிடாயின் போது நோன்பு நோற்பதை விட்டுவிட வேண்டும். கடமையான நோன்புகளை விட்டிருந்தால் மாதவிடாய் முடிந்த பிறகு அவற்றை நிவர்த்தி செய்ய வேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் ஏற்பட்டால் அவள் தொழுவதில்லை; நோன்பு நோற்பதில்லை அல்லவா? அதுதான் மார்க்கத்தில் அவளுக்குள்ள குறைபாடாகும்.

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : புகாரி (1951)**

எங்களுக்கு அது (மாதவிடாய்) ஏற்பட்டது. அப்போது விடுபட்ட நோன்பை (மாதவிடாய் நின்ற பிறகு) மீண்டும் நோற்குமாறு நாங்கள் கட்டளையிடப்பட்டோம். விடுபட்டத் தொழுகைகளை தொழுமாறு கட்டளையிடப்படவில்லை.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (508)**

**தவாஃப் செய்வது கூடாது**

நாங்கள் ஹஜ் செய்வதற்காக (மதீனாவிலிருந்து) புறப்பட்டுச் சென்றோம். (மக்காவை அடுத்துள்ள) ஸரிஃப் என்ற இடத்தை அடைந்ததும் எனக்கு மாதவிடாய் ஏற்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள் நான் இருந்த இடத்திற்கு வந்தார்கள். அழுதுகொண்டிருந்த என்னைப் பார்த்து உனக்கு என்ன மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா? என்று வினவினார்கள். நான் ஆம் என்று சொன்னேன். இந்த மாதவிடாய் ஆதமுடைய பெண்மக்கள் மீது அல்லாஹ் ஏற்படுத்தியது. எனவே கஃபதுல்லாவைத் தவாஃப் செய்வதைத் தவிர ஹாஜிகள் செய்கின்ற மற்ற எல்லாக் காரியங்களையும் நீ செய்துகொள் என்று சொல்லிவிட்டு தங்கள் மனைவியருக்காக மாட்டைக் குர்பானி கொடுத்தார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (294)**

**உடலுறவு கொள்வது கூடாது**

மாதவிடாய் பற்றியும் உம்மிடம் கேட்கின்றனர். "அது ஓர் தொல்லை. எனவே மாதவிடாயின் போது பெண்களை விட்டும் (உடலுறவு கொள்ளாமல்) விலகிக் கொள்ளுங்கள்! அவர்கள் தூய்மையாகும் வரை அவர்களை நெருங்காதீர்கள்! அவர்கள் தூய்மையாகிவிட்டால் அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிட்டவாறு அவர்களிடம் செல்லுங்கள்!

**அல்குர்ஆன் (2 : 222)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மாதவிடாய் ஏற்பட்டுள்ள பெண்ணிடத்தில் உடலுறவு கொள்பவன் முஹம்மதின் மீது அல்லாஹ் அருளிய(வேதத்)தை மறுத்துவிட்டவனாவான்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : அஹ்மத் (9779)**

## மாதவிடாயின் போது அனுமதிக்கப்பட்டவை

மாதவிடாயின் போது எவற்றை செய்யக்கூடாது என்பதை முன்பு தெரிந்துகொண்டோம். இவற்றைத் தவிர சாதாரண நேரத்தில் அனுமதிக்கப்பட்ட மற்றக் காரியங்களை செய்வதற்கு எந்தத் தடையும் இல்லை. உடலுறவைத் தவிர தான் விரும்பும் எதை வேண்டுமானாலும் கணவன் மனைவி செய்துகொள்ளலாம்.

அறியாமைக் காலத்தில் தான் மாதவிடாய் ஏற்பட்ட பெண்களை அசுத்தம் என்று கருதி அவர்களை ஒதுக்கிவைத்திருந்தார்கள். பல மதங்களில் மாதவிடாய் ஏற்பட்டப் பெண்களை தொடக்கூடாது என்றும் அவர்களுக்கென்று தனி தட்டு பாய் தலையணை ஆகியவற்றை ஏற்படுத்தி அவர்களை தீண்டத்தகாதவர்களைப் போன்று கருதிக்கொண்டிருக்கிறார்கள். இஸ்லாம் இதையெல்லாம் தகர்த்து எரிகிறது.

### கணவனுக்குப் பணிவிடை செய்யலாம்

நபி (ஸல்) அவர்கள் (மஸ்ஜிதுந்நபவீ பள்ளிவாசலில்) இஃதிகாஃப் இருந்து கொண்டிருந்த போது அங்கிருந்தவாறே (அருகிலிருக்கும் அறையிலிருந்த) என் பக்கம் தலையை நீட்டுவார்கள். மாதவிடாய் ஏற்பட்டுள்ள நிலையிலும் நான் அவர்களது தலையைக் கழுவுவேன்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (301)**

எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும் போதும் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு தலை வாரிவிடுவேன்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (295)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் (இஃதிகாஃபில்) இருந்துகொண்டு, “(அறையிலுள்ள) தொழுகை விரிப்பை எடு” என்று என்னிடம் சொன்னார்கள். அதற்கு நான் “எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுள்ளதே!” என்றேன். அப்போது அவர்கள் “மாதவிடாய் என்பது உனது கையில் (ஒட்டிக்கொண்டிருப்பது) இல்லை” என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (502)**

### முத்தமிடலாம்

நான் நபி (ஸல்) அவர்களுடன் கமீலா எனும் கரை வேலைப்பாடுகள் கொண்ட ஒரு கருப்புப்போர்வைக்குள் இருந்தபோது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது .மாதவிடாய்க் காலத்தில் அணியும் துணியை எடுப்பதற்காக போர்வைக்குளிருந்து மெல்ல நழுவிச் சென்று அதை அணிந்துகொண்டேன்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் "உனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா?" என்று கேட்டார்கள். நான் 'ஆம்' என்றேன். ஆயினும் அவர்கள் என்னை (த் தம்மருகில்) அழைத்து அந்தப் போர்வைக்குள் என்னைக் கிடத்திக்கொண்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருக்கும்போது என்னை முத்தமிடுவார்கள். நானும் நபி (ஸல்) அவர்களும் (ஒருமித்து) ஒரே பாத்திரத்திலிருந்து (தண்ணீர் மொண்டு) பெருந்துடக்கின் (கடமையான) குளியலை நிறைவேற்றுவோம்.

**அறிவிப்பவர் : உம்மு சலமா (ரலி)**

**நூல் : புகாரி (322)**

**கட்டியணைக்கலாம்**

எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும்போது நபி (ஸல்) அவர்கள் என்னை துணி கட்டிக் கொள்ளுமாறு பணிப்பார்கள். (நான் அவ்வாறே செய்துகொள்வேன்.) அப்போது அவர்கள் என்னை அணைத்துக்கொள்வார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (300)**

**மடியில் படுக்கலாம்**

நபி (ஸல்) அவர்கள் நான் மாதவிடாயுடன் இருக்கும்போதும் எனது மடியில் தமது தலையை வைத்தபடி திருக்குர்ஆன் ஓதுவார்கள்.

**அறிவிப்பர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (297)**

**பெருநாள் திடலுக்கு வர வேண்டும்**

மாதவிடாய் ஏற்பட்ட பெண்கள் தொழ தடுக்கப்பட்டிருந்தாலும் பெருநாள் அன்று திடலுக்குச் சென்று தொழிகையைத் தவிர மற்ற அனைத்துக் காரியங்களிலும் பங்கேற்பது கட்டாயமாகும்.

இரு பெருநாட்களிலும் மாதவிடாய்ப் பெண்களையும் வீட்டில் இருக்கின்ற கண்ணிப் பெண்களையும் (தொழும் திடலுக்குப்) போகச் சொல்லுமாறு நாங்கள் கட்டளையிடப்பட்டோம். அப்பெண்கள் வீட்டிலிருந்து வெளியாகி முஸ்லிம்கள் தொழுகின்ற இடத்திற்குச் சென்று அவர்களுடைய பிரச்சாரத்தில் கலந்துகொள்ள வேண்டும். தொழும் இடத்தை விட்டு மாதவிடாய்ப் பெண்கள் ஒதுங்கியிருக்க வேண்டும். நபி (ஸல்) அவர்களின் இக்கட்டளையை கேட்டுக்கொண்டிருந்த பெண்களில் ஒருவர் அல்லாஹ்வின் தூதரே எங்களில் எவருக்கேனும் தலையில் அணியும் முக்காடு இல்லையானால் என்ன செய்வது? என்றார். அதற்கு

அவளுடைய தோழி தனது (உபரியான) முக்காட்டை இவளுக்கு அணியக் கொடுக்கட்டும் என பதிலளித்தார்கள்.

**அறிவிப்பவர் : உம்மு அதிய்யா (ரலி)**

**நூல் : புகாரி (351)**

பெருநாளில் (தொழும் திடலுக்கு) நாங்கள் புறப்பட வேண்டும் எனவும் கூடாரத்திலுள்ள கன்னிப் பெண்களையும் மாதவிடாய் ஏற்பட்டுள்ள பெண்களையும் புறப்படச் செய்ய வேண்டுமெனவும் நாங்கள் கட்டளையிடப்பட்டிருந்தோம். பெண்கள் ஆண்களுக்குப் பின்னால் இருப்பார்கள். ஆண்களின் தஆவுடன் அவர்களும் தஆச் செய்வார்கள். அந்த நாளின் பரக்கத்தையும் புனிதத்தையும் அவர்கள் எதிர்பார்ப்பார்கள்.

**அறிவிப்பவர் : உம்மு அதிய்யா (ரலி)**

**நூல் : புகாரி (971)**

## மாதவிடாய் இரத்தம் பட்ட ஆடை

மாதவிடாய் இரத்தம் பட்டை இடத்தை நீரால் கழுவிவிட்டு அதையே அணிந்து கொள்ளலாம். அதிலே தொழுதும் கொள்ளலாம்.

ஒரு பெண் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், “அல்லாஹ்வின் தூதரே! ஒரு பெண்ணுடைய ஆடையில் மாதவிடாய் இரத்தம் பட்டுவிட்டால் அவள் என்ன செய்ய வேண்டும், என்கிறீர்கள்?” என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “உங்களில் ஒரு பெண்ணுடைய ஆடையில் மாதவிடாய் இரத்தம் பட்டுவிட்டால் (அது காய்ந்துவிட்டிருந்தால்) அதைச் சுரண்டி விட்டுப் பின்னர் அந்த இடத்தில் தண்ணீர் தெளித்துவிடட்டும். பின்னர் அந்த ஆடையுடன் தொழுதுகொள்ளலாம்” என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி)**

**நூல் : புகாரீ (307)**

எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும் போது நானும் நபி (ஸல்) அவர்களும் ஒரே போர்வைக்குள் படுத்துக்கொள்வோம். என்னிடமிருந்து (இரத்தம்)ஏதேனும் அவர்களின் மீது பட்டுவிடுமானால் அவ்விடத்தைக் கழுவிக்கொள்வார்கள். அதற்கு மேல் வேறெதுவும் செய்யமாட்டார்கள். அதே ஆடையுடனே தொழவும் செய்வார்கள். மீண்டும் வந்து படுத்துக்கொள்வார்கள். என்னிடமிருந்து ஏதேனும் அவர்கள் மீது பட்டுவிடுமானால் அவ்வாறே செய்துவிட்டு அந்த ஆடையுடனே தொழுதுகொள்வார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : தாரமீ (995)**

## தொடர் உதிரப்போக்கு

சில பெண்களுக்கு குறிப்பிட்ட நாட்கள் என்றில்லாமல் பல நாட்கள் தொடர்ந்து இரத்தம் வந்துகொண்டிருக்கும். இது ஒரு நோய். ஆனால் இதை சிலர் மாதவிடாய் என கணித்து தொழமாமல் இருந்துவிடுகின்றனர். இது தொடர்பாக இஸ்லாம் காட்டும் வழிமுறைகள் என்னவென்பதைக் காண்போம்.

வழக்கமாக மாதவிடாய் ஏற்படும் நாட்களில் தொழுகை நோன்பு உடலுறவு போன்ற விஷயங்களை தவிர்த்துக்கொள்ள வேண்டும். இதற்குப் பிறகும் இரத்தம் தொடர்ந்து வருமானால் அப்போது குளித்துவிட்டு மாதாவிடாய் ஏற்படாத பெண் எவ்வாறு நடந்துகொள்வாளோ அதுபோன்று தொடர் உதிரப்போக்கு ஏற்படுபவர்கள் நடந்துகொள்ள வேண்டும். இவர்கள் தொழுகையையும் நோன்பையும் விடுவதற்கு அனுமதியில்லை.

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் ஒரு பெண் இரத்தப்போக்கு நோயால் பீடிக்கப்பட்டிருந்தார். அவருக்காக நபி (ஸல்) அவர்களிடம் நான் சட்ட விளக்கம் கேட்டபோது இந்த நோய் வருவதற்கு முன் அந்தப் பெண்ணுக்கு வழக்கமாக மாதவிடாய் வந்துகொண்டிருந்த நாட்களைக் கழித்து அந்த நாட்கள் முடிந்ததும் குளித்து விட்டுத் துணியால் இறுகக் கட்டிக் கொண்டு அவள் தொழ வேண்டும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : உம்மு ஸலமா (ரலி)**

**நூல் : நஸயீ (351)**

பாத்திமா பின்த் அபீஹுபைஷ் என்ற பெண்மணி, நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் உயர் இரத்தப்போக்கு (இஸ்திஹாளா) ஏற்படும் ஒரு பெண் ஆவேன்; (தொடர்ந்து உதிரம் கசிவதால்) நான் சுத்தமாவதில்லை. நான் தொழுகையை விட்டுவிடலாமா?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இல்லை! (தொழுகையைவிட்டுவிடாதே!) இது இரத்தக் குழா(யிலிருந்து வருவதே)யாகும். மாதவிடாய் இரத்தமன்று. உனக்கு மாதவிடாய் வரும்போது தொழுகையை விட்டுவிடு ; அது நின்றுவிட்டால் இரத்தத்தைக் கழுவி(குளித்து)விட்டுத் தொழுதுகொள்!" என்று கூறினார்கள்.

மேலும் நபி (ஸல்) அவர்கள் (அப்பெண்மனியிடம்) "பின்னர் அடுத்த மாதவிடாய் காலம் வரும் வரை ஒவ்வொரு தொழுகைக்கும் நீ அங்கசுத்தி (உளூ) செய்துகொள்!" என்றும் சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (228)**

மேற்கண்ட ஹதீஸின் அடிப்படையில் மாதவிடாய் நாட்கள் முடிந்தவுடன் குளித்து விட்டு ஒவ்வொரு தொழுகைக்கும் உளூ செய்துகொள்ள வேண்டும். அல்லது முடியுமானால் பின்வரும் முறையை கடைபிடிக்கலாம்.

ஒரு பெண்ணிற்கு தொடர்உதிரப்போக்கு ஏற்படுகிறது. (அவள் என்ன செய்ய வேண்டும்?) என்று நான் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் மாதவிடாய் ஏற்படும் காலங்களில் (தொழாமல் நோன்பு நோற்காமல்) இருப்பாள். (மாதவிடாய்க் காலம் முடிந்த உடன்) குளித்து விட்டு லுஹரை அதன் கடைசி நேரத்திலும் அஸரை அதன் ஆரம்ப நேரத்திலும் அவள் தொழ வேண்டும். பிறகு மீண்டும் குளித்துவிட்டு மஃரிபை அதன் கடைசி நேரத்திலும் இஷாவை அதன் ஆரம்ப நேரத்திலும் தொழுது கொள்ள வேண்டும். பின்ப ஃபஜர் தொழுகைக்காக (மீண்டும்) குளித்துக்கொள்ள வேண்டும் என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி)**

**நூல் : நஸயீ (358)**

தொடர் உதிரப்போக்குள்ளவர்கள் மாதவிடாய் ஏற்படாத பெண்களைப் போன்று நடந்துகொள்வார்கள். எனவே இவர்கள் தொழுக வேண்டும். நோன்பு நோற்க வேண்டும். இவர்கள் கணவனுடன் உடலுறவில் ஈடுபடுவதற்கு தடை ஏதுமில்லை.

**ஸ்கலிதம் ஏற்பட்டால் குளிப்பு கடமை**

கனவு காண்பதன் மூலம் உறக்கத்தில் விந்து வெளிப்படுவதற்கு ஸ்கலிதம் வெளிப்படுதல் என்று சொல்வார்கள். இது ஆண்களுக்கு அதிகம் ஏற்படும். அரிதாக பெண்களுக்கும் ஏற்படும். இது வெளிப்பட்டால் குளிப்பது கடமையாகிவிடும்.

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், ஓர் ஆண்மகன் தூக்கத்தில் காண்பதைப் போன்று தனது தூக்கத்தில் காணும் பெண்ணைப் பற்றி (அவள்மீது குளியல் கடமையாகுமா? என்று) கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “அவ்வாறு ஒரு பெண் கண்டால் அவள் குளித்துக் கொள்ளவேண்டும்” என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : உம்மு சுலைம் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (521)**

**மாதவிடாய் ஏற்பட்டால் குளிக்க வேண்டும்**

மாதவிடாய் ஏற்படும்போது தொழுகையை விட்டுவிடு! மாதவிடாய்க் காலம் கழிந்ததும் குளித்துவிட்டு தொழுதுகொள்!” என்றார்கள்.’ என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (228)**

**பிரசவத்தீட்டு ஏற்பட்டால் குளிக்க வேண்டும்**

பெண்கள் குழந்தையை பெற்றெடுக்கும் போது அசுத்தம் வெளிப்படும். இதற்கு பிரசவத் தீட்டு என்று தமிழில் சொல்வார்கள். அரபியில் நிஃபாஸ் என்று சொல்வார்கள். இது ஏற்பட்ட பெண்கள் குளித்து தூய்மையடைய வேண்டும்.

துல்கஃதா மாதத்தில் எஞ்சிய ஐந்து நாட்கள் இருக்கும் போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஹஜ் செய்வதற்காக) புறப்பட்டார்கள். அவர்களுடன் நாங்களும் புறப்பட்டோம். துல்ஹுலைஃபா என்ற இடத்தை வந்தடைந்த போது உமைஸுடைய மகள் அஸ்மா (ரலி) அவர்கள் அபூபக்ரின் மகன் முஹம்மத் என்பாரை பெற்றெடுத்தார். நான் என்ன செய்ய வேண்டும் என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டுவருமாறு அஸ்மா (ரலி) தூது அனுப்பினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் நீ குளித்துக்கொண்டு மறைவிடத்தில் துணியை கட்டிக்கொள் என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் ; ஜாபிர் (ரலி)**

**நூல் ; நஸயீ (289)**

குழந்தையை பெற்றெடுத்த உடனே குளித்துக்கொள்ள முடியாவிட்டால் தன்னால் எப்போது இயலுமோ அப்போது குளித்து தூய்மையாகிக்கொள்ள வேண்டும். அதுவரைக்கும் மாதவிடாய் ஏற்பட்டப் பெண்களைப் போன்றே தொழுகையையும் நோன்பையும் விட்டுவிட வேண்டும். தூய்மையானப் பிறகு விடுபட்ட நோன்பை மாத்திரம் திரும்ப வைத்தால் போதும்.

**உடலுறவு கொண்டால் குளிப்பு கடமையாகும்**

உடலுறவு கொண்டால் குளிப்பது கடமையாகிவிடும். விந்து வெளிப்பட வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஆண்குறியும் பெண்குறியும் சந்தித்துவிட்டாலே இருவரும் குளிப்பது கடமை.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒருவர் தம் மனைவியின் (இருகை இருகால் ஆகிய) நான்கு அங்கங்களுக்கிடையில் வீற்றிருந்து உள்ளீடு செய்துவிட்டாரானால் அவர் மீது குளியல் கடமையாகிவிடுகிறது. (விந்து வெளியாகா விட்டாலும் சரியே!)

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (291)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒருவர் தம் மனைவியின் (இரு கைகள், இரு கால்கள் ஆகிய) நான்கு கிளைகளுக்கிடையே அமர்ந்து (ஆண்)குறி (பெண்)குறியைத் தொட்டு (சந்தித்து)விட்டாலே (இருவர்மீதும்) குளியல் கடமையாகிவிடும்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (291)**

**குளிப்புக்கடமையானவர்கள் தொழக்கூடாது**

குளிப்புக் கடமையாக இருக்கும் போது குளிக்கும் வரை தொழுகையை நெருங்காதீர்கள்.

**அல்குர்ஆன் (4 : 43)**

**கடமையான குளிப்பை நிறைவேற்றும் முறை**

பெண்கள் மார்க்கத்தை பேணுகிறோம் என்ற எண்ணத்தில் மார்க்கம் கட்டளையிடாத பல காரியங்களை செய்கின்றனர். கடமையான குளிப்பை நிறைவேற்ற நிய்யத் அவசியம் அதில் நவைத்து அனிஃதஸல குஸ்லன் மினல் ஹைலி வதஹாரத்தன் லில் பதனி வ இஸ்திஹ்பாபன் லிஸ்ஸலாத்தி என்று கூறி குளித்தால் தான் குளிப்பு நிறைவேறும் என்றும் எண்ணுகின்றனர். இது தவறாகும். நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு சொல்லுமாறு நமக்குக் கட்டளையிடவில்லை.

குளிக்கும் போது சில வாசகங்களை கூற வேண்டும் என்றும் ஆயத்துல் குர்ஸியை ஓத வேண்டும் என்றும் பலவிதமான நடைமுறைகள் சில ஊர்களில் உள்ளன. இதற்கும் நபிவழியில் எவ்வித ஆதாரமும் இல்லை.

முதலில் இரு கைகளைக் கழுவிய பின்னர் மர்மஸ்தானத்தை நன்றாகத் தேய்த்துக் கழுவி சுத்தம் செய்ய வேண்டும். பிறகு உளூ செய்ய வேண்டும். உடல் முழுவதும் தண்ணீர் பட்டு நனையுமாறு குளிக்க வேண்டும்.

நான் நபி (ஸல்) அவர்கள் குளிப்பதற்குத் தண்ணீர் ஊற்றினேன். அவர்கள் தமது வலக் கரத்தால் நீர் அள்ளி இடக்கையின் மீது ஊற்றி இருகைகளையும் கழுவினார்கள்; பிறகு தமது மர்மஸ்தலத்தைக் கழுவினார்கள். பிறகு தமது கையைப் பூமியில் மண் கொண்டு தேய்த்து பிறகு அதை (நீரால்) கழுவினார்கள். பிறகு வாய் கொப்பளித்து மூக்கிற்குத் தண்ணீர் செலுத்தி(ச் சிந்தி)னார்கள். பிறகு தம் முகத்தைக் கழுவி, தலையில் தண்ணீர் ஊற்றினார்கள். பிறகு சற்று நகர்ந்து தம்மிரு பாதங்களையும் கழுவினார்கள். பிறகு (துடைத்துக்கொள்ள) துண்டு கொடுக்கப் பட்டது. ஆனால் அதன் மூலம் அவர்கள் துடைத்துக்கொள்ளவில்லை.

**அறிவிப்பவர் : மைமூனா (ரலி)**

**நூல் : புகாரி (259)**

நபி (ஸல்) அவர்கள் பெருந்துடக்கிற்காக (கடமையானக் குளியலைக்) குளிக்கும்போது (முதல்) தமது மர்மஸ்தலத்தை கையினால் கழுவினார்கள். பிறகு கையைத் தேய்த்து கழுவினார்கள். பிறகு தொழுகைக்காக உளூ செய்வது போன்று உளூ செய்தார்கள். குளித்து முடித்து (இறுதியில்) தம்மிரு கால்களையும் கழுவினார்கள்.

**அறிவிப்பவர் : மைமூனா (ரலி) நூல் : புகாரி (260)**

அஸ்மா பின்த் ஷகல் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம், மாதவிடாய்க் குளியல் பற்றிக் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உங்களில் ஒருவர் (மாதவிடாய்க் குளியன் போது) தண்ணீரையும் இலந்தை இலைகளையும் எடுத்து நன்கு சுத்தம் செய்துகொள்ளட்டும். பிறகு தலைக்குத் தண்ணீர் ஊற்றி நன்றாகத் தேய்த்து தலையின் சருமம் நனையும்வரைக் கழுவட்டும். பிறகு உடம்புக்குத் தண்ணீர் ஊற்றட்டும். அதன் பின்னர் கஸ்தூரி தடவப்பட்ட பஞ்சுத்துண்டு ஒன்றை எடுத்து சுத்தம் செய்துகொள்ளட்டும்" என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (552)**

### சடையை அவிழ்க்க வேண்டியதில்லை

சடைபோட்டுள்ள பெண்கள் அதை அவிழ்த்துத் தான் குளிக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

அல்லாஹ்வின் தூதரே நான் அதிகம் சடையுடைய பெண்ணாக இருக்கிறேன். கடமையான குளிப்பிற்காக அதை நான் அவிழ்க்க வேண்டுமா? என்று கேட்டேன். அதற்கு தேவையில்லை. உன் தலைக்கு இரு கையளவு தண்ணீரை எடுத்து மூன்று முறை உன் தலையில் ஊற்றிக் கொள். பின்னர் உன் (உடல்) மீது ஊற்றிக்கொள். நீ தூய்மையடைந்து விடுவாய் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : உம்மு ஸலமா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (497)**

### குற்றாலத்தில் குளிக்கலாமா?

அன்னிய ஆண்கள் தன் உடம்பை பார்ப்பதற்கு வாய்ப்புள்ள இடங்களில் பெண்கள் குளிப்பது கூடாது.

ஹிம்ஸ் அல்லது ஷாம் நாட்டைச் சார்ந்த பெண்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடத்தில் வருகை தந்திருந்தார்கள். குளியலறைகளுக்குச் சென்று (குளித்து வரும்) பெண்கள் நீங்கள் தானே? தனது கணவனுடைய வீடு அல்லாத வேறு இடத்தில் ஆடையை அவிழ்க்கும் பெண் தனக்கும் தன் இறைவனுக்கும் மத்தியிலிருந்த திரையை கிழித்துவிடுகிறாள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன் என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அபுல் மலீஹ் (ரஹ்)**

**நூல் : திர்மிதி (2727)**

எனவே ஆணும் பெண்ணும் கலந்திருக்கும் இடத்தில் ஆடையை கிழற்றுவது கூடாது.

புர்காவுடன் குற்றாலத்தில் குளிக்கலாம் என்று சிலர் கருதிக்கொண்டிருக்கிறார்கள். இது தவறாகும். இஸ்லாமிய ஒழுங்குமுறையை மீறுகின்ற ஒழுக்கம் கெட்ட இடங்களில் குற்றாலம் ஒன்றாகும். அங்கு வரும்

ஆண்களில் பெரும்பாலானவர்களின் பார்வை குளித்துக்கொண்டிருக்கும் பெண்களை நோக்கியே உள்ளது. அறைகுறை ஆடையுடன் குளித்துக்கொண்டிருக்கும் பெண்களுடன் நாம் புர்காவை அணிந்து குளித்தாலும் நம்மையும் அண்ணிய ஆடவன் தவறான பார்வையில் பார்க்கத்தான் செய்வான்.

இறைவனின் வசனங்கள் கேலிகூத்தாக்கப்படும் இடங்களுக்கு நாம் செல்லக்கூடாது என்று திருக்குர்ஆன் கூறுகிறது. எனவே ஆணும் பெண்ணும் கலந்து குளிக்கும் ஒழுக்கம் கெட்ட இடங்களை பெண்கள் மாத்திரம் இல்லாமல் ஆண்களும் புறக்கணித்தாக வேண்டும்.

அல்லாஹ்வின் வசனங்கள் மறுக்கப்பட்டு, கேலி செய்யப்படுவதை நீங்கள் செவியுற்றால் அவர்கள் வேறு பேச்சுக்களில் ஈடுபடும் வரை அவர்களுடன் அமராதீர்கள்! (அவர்களுடன் அமர்ந்தால்) அப்போது நீங்களும் அவர்களைப் போன்றவர்களே என்று இவ்வேதத்தில் உங்களுக்கு அவன் அருளியுள்ளான்.

**அல்குர்ஆன் (4 : 140)**

ஆண்கள் வராத நீர்நிலையாக இருந்தால் அல்லது ஆண்களின் பார்வை படாதவாறு மறைப்புகள் உள்ள அருவியாக இருந்தால் மாத்திரமே அவ்விடத்தில் குளித்துக்கொள்வதில் தவறில்லை.

### குளிப்புக் கடமையானவர்கள் குர்ஆனைத் தொடலாம். ஓதலாம்.

தூய்மையானவர்களைத் தவிர (மற்றவர்கள்) அதைத் தொடமாட்டார்கள்.

**அல்குர்ஆன் (56 : 79)**

குளிப்புக் கடமையானவர்கள் திருக்குர்ஆனைத் தொடக் கூடாது. ஓதக்கூடாது என்பதற்கு வலுவான ஆதாரமாக இந்த வசனத்தை எடுத்து வைக்கின்றனர். இந்த வசனத்தை மேலோட்டமாகப் பார்ப்பவர்கள் திருக்குர்ஆனை தூய்மையற்ற நிலையில் உள்ள மாதவிடாய் ஏற்பட்டவர்கள் தொடக்கூடாது. ஓதக்கூடாது என்று தான் முடிவு செய்வார்கள்.

ஆனால் இந்த வசனத்தின் முந்தைய வசனங்களையும் இது போன்று அமைந்த மற்ற வசனங்களையும் திருக்குர்ஆன் நபி (ஸல்) அவர்களுக்கு எவ்வாறு இறக்கப்பட்டது என்பதையும் விளங்கினால் இவர்களின் கருத்து முற்றிலும் தவறானது என்பதை விளங்கலாம்.

இவ்வசனத்தில் கூறப்பட்டுள்ள தூய்மையானவர்கள் என்றால் யார்? தொடமாட்டார்கள் என்றால் எதை? என்பதை முதலில் காண்போம்.

நபி (ஸல்) அவர்களுக்கு இறக்கியருளப்பட்ட திருக்குர்ஆன் எழுத்து வடிவில் அருளப்படவில்லை. ஒலி வடிவில் தான் அருளப்பட்டது. அதை நபி (ஸல்) அவர்கள் மனதில் பதிவு செய்துகொள்வார்கள் என்பதை முதலில் மனதில் கொள்ள வேண்டும்.

திருக்குர்ஆன் எழுத்து வடிவில் இறக்கப்படவில்லை எனும் போது தொடுதல் என்ற கேள்வியே எழாது. தொடும் விதத்தில் திருக்குர்ஆன் இறக்கப்பட்டிருந்தால் மட்டுமே இந்தக் குர்ஆனை தூய்மையானவர்களைத் தவிர யாரும் தொடமாட்டார்கள் என்று கூற முடியும்.

இந்த அடிப்படையில் 56 : 79 வசனத்தில் கூறப்பட்ட தொடுதல் என்பது நமது கையில் உள்ள குர்ஆனைக் குறிக்காது என்பதை விளங்கலாம். மேலும் இக்கருத்தை வலுவூட்டும் வகையில் இதன் முந்தைய வசனங்கள் அமைந்துள்ளன.

இது பாதுகாக்கப்பட்ட பதிவேட்டில் இருக்கும் மகத்துவமிக்க குர்ஆனாகும். தூய்மையானவர்களைத் தவிர (மற்றவர்கள்) அதைத் தொடமாட்டார்கள். அகிலத்தின் இறைவனிடமிருந்து (இது) அருளப்பட்டது.

**அல்குர்ஆன் (56 : 77. 79)**

56 : 79 வசனத்தின் முந்தைய இரண்டு வசனங்களையும் படிக்கும் போது ஒரு பேருண்மை நமக்கு விளங்கும். இது பாதுகாக்கப்பட்ட பதிவேட்டில் இருக்கும் மகத்துவமிக்க குர்ஆன் என்று அல்லாஹ் கூறுகிறான். அடுத்த வசனத்தில் தூய்மையானவர்களைத் தவிர (மற்றவர்கள்) அதைத் தொடமாட்டார்கள் என்று கூறுகிறான்.

இப்போது அதை என்ற சொல் நம் கையில் இருக்கும் திருக்குர்ஆனைப் பற்றிப் பேசவில்லை. பாதுகாக்கப்பட்ட ஏட்டில் (லவ்ஹுல் மஹ்ஃபூலில்) உள்ள திருக்குர்ஆனைப் பற்றித் தான் பேசுகின்றது என்ற உண்மை தெளிவாகிறது.

இந்தக் கருத்தை மேலும் வலுவூட்டும் வண்ணம் திருக்குர்ஆனின் பின்வரும் வசனங்கள் அமைந்துள்ளன.

அவ்வாறில்லை! இது ஓர் அறிவுரை. விரும்பியவர் படிப்பினை பெற்றுக் கொள்வார். இது தூய்மைப்படுத்தப்பட்டு உயர்வாக்கப்பட்ட மதிப்புமிக்க ஏடுகளில் உள்ளது. மரியாதைக்குரிய நல்லோர்களான எழுத்தர்களின் கைகளில் உள்ளது.

**அல்குர்ஆன் (80 : 11)**

இவ்வசனமும் திருக்குர்ஆனின் மூலப்பிரதி எங்குள்ளது என்பதைப் பற்றி பேசுகின்றது. இவ்வசனங்களிலும் 56 : 79 வசனத்தில் கூறப்பட்டதைப் போன்றே கூறப்பட்டிருந்தாலும் 56 : 79 வசனத்தை விட கூடுதல் தெளிவுடனும் விளக்கத்துடனும் காணப்படுகின்றது.

தூய்மையானவர்கள் என்று 56 : 79 வசனத்தில் கூறப்பட்டவர்கள் யார்? என்பதை இவ்வசனம் தெளிவுபடுத்துகிறது. அவர்கள் வானவர்கள் தாம் என்று இவ்வசனத்திலிருந்து அறிந்துகொள்ள முடிகிறது.

குரைஷிக் குல இறைநிராகரிப்பாளர்கள் இந்தக் குர்ஆனை ஷைத்தான்கள் கொண்டுவருகின்றனர் என எண்ணிணார்கள். அவர்களுக்கு அல்லாஹ் பின்வருமாறு பதில் கூறினான்.

இதை ஷைத்தான்கள் இறக்கிடவில்லை. அது அவர்களுக்குத் தகுதியானதும் அல்ல. அதற்கு அவர்களால் இயலாது. அவர்கள் செவியேற்பதை விட்டும் தடுக்கப்பட்டவராவர்.

**அல்குர்ஆன் (26 : 210 212)**

இந்த வசனத்தில் சொல்லப்பட்டதைப் போன்று திருக்குர்ஆன் தூய்மையானவர்களான மலக்குமார்களின் கையிலே பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளது. ஷைத்தான்களால் இதை தொடமுடியாது என்ற பொருளில் தான் 56 : 79 வது வசனமும் அமைந்துள்ளது.

குளிப்பு கடமையானவர்கள் குர்ஆனைத் தொடக்கூடாது என்ற அர்த்தம் தான் இந்த வசனத்தின் பொருள் என்றால் தூய்மையானவர்களைத் தவிர வேறுயாரும் இக்குர்ஆனைத் தொடக்கூடாது என்று தொடுவதற்கு தடைபோடும் விதத்தில் அல்லாஹ் கூறியிருப்பான். ஆனால் மற்றவர்கள் இதைத் தொடமாட்டார்கள் என்று அல்லாஹ் கூறியிருப்பது பாதுகாக்கப்பட்ட ஏட்டில் உள்ள குர்ஆனை மலக்குமார்களைத் தவிர மற்றவர்களால் தொட முடியாது என்ற பொருளையே உணர்த்துகிறது.

மேலுள்ள வசனங்கள் அனைத்தையும் ஒன்று சேர்த்து பார்க்கும் போது 56 : 79 வது வசனத்தில் சொல்லப்பட்ட தூய்மையானவர்கள் என்பது வானவர்கள் என்பதும் அதை என்று கூறப்பட்டுள்ளது வானத்தில் பாதுகாக்கப்பட்ட ஏட்டில் உள்ள குர்ஆன் என்பதும் ஐயத்திற்கு இடமின்றி தெளிவாகின்றது. எனவே இந்த வசனத்தை வைத்துக் கொண்டு தூய்மையான நிலையில் தான் குர்ஆனைத் தொட வேண்டும் என்று வாதிட முடியாது.

தூய்மையில்லாதவர்கள் திருக்குர்ஆனைத் தொடக்கூடாது. ஓதக்கூடாது என்றக் கருத்தில் சில ஹதீஸ்கள் வருகிறது. அவையனைத்தும் ஆதாரமற்றவையாகும். எனவே குர்ஆனை எந்த நிலையில் வேண்டுமானாலும் தொடலாம். ஓதலாம்.

## உளூ செய்ய வேண்டிய நேரங்கள்

குளிப்புக் கடமையானவர்களாக இருக்கும் போது உண்ணுவதற்கும் உறங்குவதற்கும் முன்னால் உளூ செய்துகொள்ள வேண்டும். இது கட்டாயம் அல்ல. செய்வது சிறப்பு.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், இரவு நேரத்தில் தமக்கு பெருந்துடக்கு ஏற்பட்டு (குளியல் கடமையாகி)விடுவது பற்றிக் கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்" உளூ செய்யுங்கள்; உங்கள் பிறப்புறுப்பைக் கழுவுங்கள்; பிறகு உறங்குங்கள்" என்றார்கள்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)**

**நூல் : புகாரி (290)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருந்துடக்கு எற்பட்டு (குளியல் கடமையாகி) இருக்கும்போது உண்ணவோ உறங்கவோ விரும்பினால் (முன்னதாக) தொழுகைக்கு அங்கத் தூய்மை (உளூ) செய்வதைப் போன்று அங்கத் தூய்மை செய்துகொள்வார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் ; முஸ்லிம் (513)**

**மறு உடலுறவுக்கு முன்**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : உங்களில் ஒருவர் தம் இல்லாளிடம் பாலுறவு கொண்டுவிட்டுப் பின்னர் மீண்டும் (உறவுகொள்ள) விரும்பினால் அவர் (இடையில்) அங்கத் தூய்மை (உளூ) செய்துகொள்ளட்டும்.

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : முஸ்லிம் (518)**

**இச்சை நீர் வெளிப்பட்டால்?**

இச்சை ஏற்படும் போது விந்து வெளிப்படுவதற்கு முன்னால் சிறிய அளவில் வெளிவரும் நீருக்கு இச்சை நீர் என்று சொல்லப்படுகிறது. இது வெளிப்பட்டால் குளிப்பு கடமையாகாது. மாறாக உளூ முறிந்துவிடும். மறும உறுப்பை கழுவிவிட்டு உளூ செய்துகொள்ள வேண்டும்.

இச்சைக் கசிவு நீர் ('மதீ') அதிகமாக வெளியேறும் ஆடவனாக நான் இருந்தேன். நபி (ஸல்) அவர்களின் புதல்வி (ஃபாத்திமா என் மண பந்தத்தில்) இருந்ததால் இது பற்றிக் கேட்குமாறு (வேறு) ஒருவரை நான் பணித்தேன். அவர் (அது குறித்துக்) கேட்டபோது, "(அவ்வாறு இச்சைக் கசிவு நீர் வெளியேறினால்) உளூ செய்துகொள்வீராக! (குளிக்க வேண்டியதில்லை. ஆனால்,) பிறவி உறுப்பைக் கழுவிக்கொள்வீராக" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அலீ (ரலி)**

**நூல் : புகாரி (269)**

## தொழுகைச் சட்டங்கள்

**பெண்கள் பள்ளிவாசலுக்குச் செல்லலாமா?**

பெண்கள் பள்ளிவாசலிற்கு செல்லக்கூடாது என்று முஸ்லிம்களில் பலர் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். அதனால் பெண்கள் பள்ளிக்கு வருவதை தடைசெய்கிறார்கள். ஆனால் ஆண்களும் பெண்களும் சந்திக்கும் சபைகளுக்கும் கடைத்தெருக்களுக்கும் செல்ல அனுமதிக்கிறார்கள்.

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் பெண்கள் தாராளமாக பள்ளிக்கு வந்து தொழுதுள்ளார்கள். அதை நபி (ஸல்) அவர்களும் அங்கீகரித்துள்ளார்கள். இதை ஏராளமான நபிமொழிகளில் நம்மால் காணமுடியும்.

நம்பிக்கையுள்ள (மூமினான) பெண்கள் தங்களது கம்பளி ஆடைகளால் போர்த்திக் கொண்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஃபஜ்ர் தொழுகையில் பங்கெடுப்பவர்களாக இருந்தனர். தொழுகையை முடித்துக் கொண்டு தமது இல்லங்களுக்கு திரும்பிச் செல்வார்கள் .இருட்டின் காரணமாக அவர்களை யாரும் (ஆணா பெண்ணா என்று) அறிந்துகொள்ள முடியாது.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (578)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நீண்ட நேரம் தொழுவிக்கும். எண்ணத்துடன் நான் தொழுகையில் நிற்பேன். அப்போது (பின்னால் தொழுதுகொண்டிருக்கும் பெண்களின்) குழந்தை அழுவதை நான் கேட்பேன். அந்தக் குழந்தையின் தாய்க்கு சிரமமளிக்கக் கூடாது என்பதற்காக நான் எனது தொழுகையை சுருக்கமாக முடித்துவிடுவேன்.

**அறிவிப்பவர் : அபூகதாதா (ரலி)**

**நூல் : புகாரி (707)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சலாம் கொடுத்து முடித்ததும் பெண்கள் எழுந்து (சென்று) விடுவார்கள். நபி (ஸல்) அவர்கள் எழுவதற்கு முன் சற்று நேரம் (தொழுத இடத்திலேயே) வீற்றிருப்பார்கள். (இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகையில், "அல்லாஹ் நன்கறிந்தவன்! தொழுகை முடித்து திரும்பும் ஆண்கள் பெண்களிடம் வருவதற்கு முன் பெண்கள் (அங்கிருந்து) புறப்பட்டுச் சென்றுவிடவேண்டும் என்பதற்காகவே நபி (ஸல்) அவ்வாறு வீற்றிருந்தார்கள் என்றே நான் கருதுகிறேன்" என்றார்கள்.

**அறிவிப்பவர் : உம்மு ஸலமா (ரலி)**

**நூல் : புகாரி (837)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: தஸ்பீஹ் (சுப்ஹானல்லாஹ் எனக்) கூறுதல் ஆண்களுக்குரியதும் கைதட்டுதல் பெண்களுக்குரியதுமாகும்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (1203)**

(ஒரு நாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பாதி இரவு வரை) இஷாத் தொழுகையைப் பிற்படுத்தினார்கள். உமர் (ரலி) அவர்கள் அவர்களை அழைத்து, "(தொழுகைக்கு வந்திருந்த) பெண்களும் சிறுவர்களு:ம உறங்கிவிட்டனர்" என்று கூறியதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது அறையிலி

ருந்து) புறப்பட்டு வந்து, "பூமியில் வசிப்போரில் உங்களைத் தவிர வேறுயாரும் இந்தத் தொழுகையைத் தொழவில்லை" என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (862)**

உமர் (ரலி) அவர்களின் மனைவியரில் (ஆத்திகா எனும்) ஒருவர் சுப்ஹு, இஷா ஆகியத் தொழுகையைப் பள்ளியில் ஜமாஅத்தில் தொழச் செல்வார். அவரிடம், "(உங்கள் கணவர்) உமர் (ரலி) அவர்கள் இ(வ்வாறு செல்வ)தை வெறுக்கிறார்கள்; ரோஷப்படுகிறார்கள் என்று தாங்கள் அறிந்திருந்தும் நீங்கள் ஏன் (பள்ளிக்குச்) செல்கிறீர்கள்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "(என்னைப் பள்ளிக்குச் செல்ல வேண்டாமென்று கூறவிடாமல்) அவரை எது தடுக்கிறது?" என்று கேட்க, 'அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "பெண்கள் பள்ளிவாசல்களுக்குச் செல்வதைத் தடுக்காதீர்கள் என்று கூறியதே உமர் (ரலி) அவர்களைத் தடுக்கிறது" என்று பதில் வந்தது.

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**

**நூல் : புகாரி (900)**

காஃப் வல்குர்ஆன் மஜீத் என்று தொடங்கும் அத்தியாயத்தை நபி (ஸல்) அவர்களின் வாயிலிருந்து (மனனமாக) நான் எடுத்துக் கொண்டேன். அதை அவர்கள் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் மிம்பரில் ஓதுவார்கள்.

**அறிவிப்பவர் : அம்ரா (ரலி) அவர்களின் சகோதரி**

**நூல் : முஸ்லிம் (1442)**

**வீட்டில் தொழுவது சிறந்தது**

பெண்கள் பள்ளிவாசலுக்குச் செல்வது அவர்களின் உரிமை. அவர்கள் விரும்பினால் பள்ளிக்கு வருவதை யாரும் தடுக்க முடியாது.

அதே நேரத்தில் வெளியில் செல்வதை தவிர்த்துக் கொண்டு வீட்டிலேயே தொழுது கொள்வது சிறந்தது. இதனால் பெண்கள் பள்ளிக்குச் செல்வது தவறு என்று எண்ணிவிடக்கூடாது. பள்ளிக்கு வருவதினால் மார்க்க உபதேசங்களை கேட்கும் வாய்ப்பு பெண்களுக்குக் கிடைக்கிறது. சஹாபிய பெண்கள் நபியவர்களின் காலத்தில் பள்ளிக்கு வந்து தொழுதுள்ளார்கள். மார்க்க அறிவை அதன் மூலம் அதிகப்படுத்திக்கொண்டார்கள்.

உங்களது பெண்கள் பள்ளிவாசல்களுக்குச் செல்வதை விட்டும் தடுக்காதீர்கள். அவர்களின் வீடுகளே அவர்களுக்குச் சிறந்தது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி) நூல் : அபூதாவுத் (480)**

பெண் வீட்டின் முற்றத்தில் தொழுவதை விட வீட்டினுள் தொழுவது சிறந்ததாகும். வீட்டினுள் அவள் தொழுவதை விட வீட்டின் உள் அறைக்குள் தொழுவது சிறந்ததாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு மஸ்ஊத் (ரலி)**

**நூல் : அபூதாவுத் (483)**

ஆண்கள் பள்ளிக்கு வந்து கூட்டுத்தொழுகையில் அவசியம் கலந்துகொள்ள வேண்டும். பெண்கள் கூட்டுத்தொழுகையில் கலந்துகொள்ள வேண்டிய அவசியமில்லை. இதை மேலுள்ள ஹதீஸ்களிலிருந்து புரிந்துகொள்ளலாம். கலந்துகொண்டால் தவறில்லை.

**குழந்தை அழும்போது விரைவாக தொழுது முடிக்கலாம்**

தொழுதுகொண்டிருக்கும் போது குழந்தை அழுதால் விரைவாக தொழுகை முடித்துக்கொள்வதில் தவறில்லை. இதை பின்வரும் ஹதீஸ் உணர்த்துகிறது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நீண்ட நேரம் தொழுவிக்கும். எண்ணத்துடன் நான் தொழுகையில் நிற்பேன். அப்போது (பின்னால் தொழுதுகொண்டிருக்கும் பெண்களின்) குழந்தை அழுவதை நான் கேட்பேன். அந்தக் குழந்தையின் தாய்க்கு சிரமமளிக்கக் கூடாது என்பதற்காக நான் எனது தொழுகையை சுருக்கமாக முடித்துவிடுவேன்.

**அறிவிப்பவர் : அபூகதாதா (ரலி)**

**நூல் : புகாரி (707)**

**குழந்தையை தூக்கி வைத்துக்கொண்டு தொழலாமா?**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் புதல்வி ஸைனபுக்கும் - அபுல் ஆஸ் பின் ரபீஆ பின் அப்தி ஷம்ஸ் அவர்களுக்கும் பிறந்த (தம் பேத்தி) உமாமா பின்த் ஸைனபைத் (தமது தோளில்) சுமந்துகொண்டு தொழுதிருக்கிறார்கள். சிரவணக்கம் (சஜ்தா மற்றும் ருகூஉ) செய்யச் செல்லும்போது உமாமாவை இறக்கிவிடுவார்கள்; நிலைக்குச் செல்லும்போது (மீண்டும்) உமாமாவை (தமது தோளில்) தூக்கிக்கொள்வார்கள்.

**அறிவிப்பவர் : அபூ கத்தாதா (ரலி)**

**நூல் : புகாரி (516)**

**ஜும்ஆத் தொழுவது பெண்களின் மீது கடமையில்லை.**

ஜும்ஆத் தொழுவது பெண்களின் மீது கடமையில்லை. விரும்பினால் தொழுதுகொள்ளலாம். விரும்பினால் விட்டுவிட்டு வழக்கம் போல் வீட்டிலே லுஹர் தொழுதுகொள்ளலாம்.

பெண்கள் அடிமைகள் நோயாளிகள் சிறுவர்கள் இவர்களைத் தவிர மற்றவர்கள் கட்டாயம் ஜும்ஆத் தொழுகையில் கலந்துகொள்ள வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : தாரிக் பின் ஷிஹாப் (ரலி)**

**நூல் : அபூதாவுத் (901)**

நபித்தோழியர்கள் நபி (ஸல்) அவர்களின் காலத்தில் ஜும்ஆத் தொழுகையில் கலந்துகொண்டிருக்கிறார்கள். எனவே கலந்துகொள்ளவும் அனுமதியுள்ளது.

நான் வெள்ளிக்கிழமை அன்று 'காஃப் வல்குர்ஆனில் மஜீத்' எனும் (50ஆவது) அத்தியாயத்தை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வாயிருந்து செவியுற்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒவ்வொரு ஜுமுஆ (சொற்பொழி)விலும் இந்த அத்தியாயத்தை ஓதுவார்கள்.

**அறிவிப்பவர் : அம்ரா பின்த் (ரலி) அவர்களின் சகோதரி**

**நூல் : முஸ்லிம் (1580)**

**பெண்கள் இமாமத் செய்யலாமா?**

பெண்கள் ஆண்களுக்கு இமாமத் செய்வதிலும் பெண்கள் மற்ற பெண்களுக்கு இமாமத் செய்வதிலும் கருத்து வேறுபாடு நிலவுகிறது.

பெண்கள் ஆண்களுக்கு இமாமத் செய்யக்கூடாது என்று ஏராளமான அறிஞர்கள் கூறுகிறார்கள். இவர்களின் கூற்றுத் தான் சரியானது. ஏனென்றால் மார்க்கத்தில் எந்த ஒரு காரியத்தை செய்வதாக இருந்தாலும் அதற்கு குர்ஆன் ஹதீஸில் ஆதாரம் இருக்க வேண்டும். குறிப்பாக வணக்கவழிபாடுகள் தொடர்பாக ஒரு சட்டத்தைக் கூறும் போது மறைமுகமாக இல்லாமல் தெளிவான அடிப்படையில் ஆதாரம் இருக்க வேண்டும்.

பெண்கள் ஆண்களுக்கு இமாமத் செய்யலாமா என்ற பிரச்சனை வணக்கம் தொடர்பானது என்பதால் அதற்கு தெளிவான அடிப்படையில் ஆதாரம் தேவை. நபி (ஸல்) அவர்களின் காலத்தில் ஆண்களுக்கு பெண்கள் இமாமத் செய்ததாக எந்த ஒரு ஹதீஸையும் இல்லை.

இமாமத் செய்கின்ற விஷயத்தில் ஆண்களுக்குரிய சட்டத்தையே பெண்களுக்கும் கூற இயலாது. ஏனென்றால் தொழுகையில் நிற்கும் போது பெண் இறுதியில் தான் நிற்க வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்படி இருக்கும் போது ஆண்களை முந்திக்கொண்டு ஒரு பெண் எப்படி முன்னால் வந்து இமாமத் செய்ய முடியும்,?

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(கூட்டுத் தொழுகையில்) ஆண்களுடைய வரிசைகளில் சிறந்தது முதல் வரிசையாகும். அவற்றில் தீயது கடைசி வரிசையாகும். பெண்களுடைய வரிசைகளில் சிறந்தது கடைசி வரிசையாகும். அவற்றில் தீயது முதல் வரிசையாகும்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (749)**

தொழுகையாளின் கவனத்தை திருப்பும் எந்த ஒரு பொருளையும் பார்வைபடும் விதத்தில் வைக்கக்கூடாது என்று தடை உள்ளது. கண்டிப்பாக பெண்கள் ஆண்களின் கவனத்தை ஈர்க்கு பொருளாக இருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது.

தொழுக்கூடியவரின் கவனத்தை திருப்பும் எந்தப் பொருளும் வீட்டில் இருப்பது கூடாது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : உஸ்மான் (ரலி)**

**நூல் : அபூதாவுத் (1735)**

பெண்களின் குரல் ஆண்களின் கவனத்தை திருப்பிவிடும் என்பதால் நபி (ஸல்) அவர்கள் பெண்கள் தொழுகையில் சப்தமிடுவதற்கு அனுமதி தரவில்லை. மாறாக இமாம் செய்த தவறைச் சுட்டிக்காட்டி அவர்கள் கைதட்ட வேண்டும் என்று கூறினார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

தஸ்பீஹ் (சுப்ஹானல்லாஹ் எனக்) கூறுதல் ஆண்களுக்குரியதும் கைதட்டுதல் பெண்களுக்குரியதுமாகும்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (1203)**

எனவே ஆண்களுக்கு பெண்கள் இமாமத் செய்யவது கூடாது என்பதே சரியானதாகும்.

பெண்கள் பெண்களுக்கு இமாமத் செய்வதிலும் கருத்து வேறுபாடு உள்ளது. இதற்கு குர்ஆன் ஹதீஸில் நேரடியாக எந்த ஆதாரமும் இல்லை. ஆயிஷா(ரலி) உம்மு சலமா(ரலி) ஆகிய நபித்தோழியர்கள் பெண்களுக்கு இமாமத் செய்ததாக தெரிவிக்கின்ற அறிவிப்புகள் பலவீனமானவையாக உள்ளன. எனவே பெண்கள் தனித்தனியே தொழுதுவதே சிறந்தது.

**பெண்கள் கிரகணத் தொழுகையில் கலந்துகொள்ளலாமா?**

சூரிய கிரகணம் சந்திர கிரகணம் ஏற்படும் போது கிரகணம் அகலும் வரை நபி (ஸல்) அவர்கள் பிரத்யேகமாக தொழுதுள்ளார்கள். சூரியன் சந்திரன் பூமி ஆகிய மூன்றும் ஒரே நேர்கோட்டில் வருவதால்

இந்த கிரகணம் ஏற்படுகிறது. இந்த மூன்று கோள்களும் ஒன்றையொன்று இழுத்து மோதிவிட்டால் உலகம் அழியும் நிலை ஏற்படும்.

இந்த இக்கட்டான நிலையில் இறைவனிடம் பாவமன்னிப்புத் தேடுவதும் தனக்கு பாதுகாப்பை கொடுக்குமாறு கேட்பதும் அவசியமாகிறது. இத்தொழுகையில் பெண்களும் கலந்துகொண்டுள்ளார்கள். எனவே கூட்டாகத் தொழப்படும் இத்தொழுகையில் பெண்கள் கலந்துகொள்வது நபிவழியாகும்.

(ஒரு முறை) நான் (என் சகோதரி) ஆயிஷா (ரலி) அவர்களிடம் வந்தேன். அப்போது (மக்களுடன்) ஆயிஷா (ரலி) அவர்கள் தொழுதுகொண்டிருந்தார்கள். நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், "மக்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது?" என்று கேட்டேன். (தொழுகையில் நின்ற) ஆயிஷா (ரலி) அவர்கள் வானை நோக்கி (த் தமது தலையால்) சைகை செய்தார்கள். (தொழுகையில் பேசக் கூடாது என்பதை உணர்த்த) 'சுப்ஹானல்லாஹ்' (-அல்லாஹ் தூயவன்) என்று கூறினார்கள். அப்போது "(இது மக்களைப் பாதிக்கும்) எதேனும் அடையாளமா?" என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் 'ஆம்' என்று தலையால் சைகை செய்தார்கள். உடனே நானும் (தொழுகையில்) நின்றுகொண்டேன். (நீண்ட நேரம் நின்றதால்) நான் கிறக்கமுற்றேன். (கிறக்கம் நீங்க) என் தலை மீது தண்ணீரைத் தெளிக்கலானேன்.

**அறிவிப்பவர் : அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி)**

**நூல் : புகாரி (86)**

**பர்தா அணிதல்**

பெண்கள் முகத்தையும் மணிகட்டு வரை இரு கைகளையும் பாதத்தையும் வெளிப்படுத்துவதற்கு மார்க்கத்தில் அனுமதி தரப்பட்டுள்ளது. இதைத் தவிர மற்ற அனைத்து உறுப்புக்களையும் அண்ணிய ஆடவரிடமிருந்து பெண்கள் அவசியம் மறைத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு மறைப்பதற்கு பயன்படுத்தப்படும் ஆடை எந்த நிறத்தில் வேண்டுமானாலும் இருக்கலாம். எந்த வடிவத்தில் வேண்டுமானாலும் தைக்கப்பட்டிருக்கலாம். இதற்கு அரபியில் ஹிஜாப் என்று சொல்லப்படுகிறது. நமது வழக்கில் பர்தா என்றும் புர்கா என்று கூறப்படுகிறது.

தமது பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளுமாறும் தமது கற்புகளைப் பேணிக் கொள்ளுமாறும் நம்பிக்கை கொண்ட பெண்களுக்குக் கூறுவீராக! அவர்கள் தமது அலங்காரத்தில் வெளியே தெரிபவை தவிர மற்றவற்றை வெளிப்படுத்த வேண்டாம். தமது முக்காடுகளை மார்பின் மேல் போட்டுக் கொள்ளட்டும். தமது கணவர்கள், தமது தந்தையர், தமது கணவர்களுடைய தந்தையர், தமது புதல்வர்கள், தமது கணவர்களின் புதல்வர்கள், தமது சகோதரர்கள், தமது சகோதரர்களின் புதல்வர்கள், தமது சகோதரிகளின் புதல்வர்கள், பெண்கள், தங்களுக்குச் சொந்தமான அடிமைகள், ஆண்களில் (தள்ளாத வயதின் காரணமாக பெண்கள் மீது) நாட்டமில்லாத பணியாளர்கள், பெண்களின் மறைவிடங்களை அறிந்து கொள்ளாத குழந்தைகள் தவிர மற்றவர்களிடம் தமது அலங்காரத்தை அவர்கள் வெளிப்படுத்த வேண்டாம். அவர்கள் மறைத்திருக்கும் அலங்காரம் அறியப்பட

வேண்டுமென்பதற்காக தமது கால்களால் அடித்து நடக்க வேண்டாம். நம்பிக்கை கொண்டோரே! அனைவரும் அல்லாஹ்வை நோக்கித் திரும்புங்கள்! இதனால் வெற்றியடைவீர்கள்.

**அல்குர்ஆன் (24 : 31)**

நபியே! (முஹம்மதே!) உமது மனைவியருக்கும், உமது புதல்வியருக்கும், (ஏனைய) நம்பிக்கை கொண்ட பெண்களுக்கும் முக்காடுகளைத் தொங்கவிடுமாறு கூறுவீராக! அவர்கள் (ஒழுக்கமுடைய பெண்கள் என்று) அறியப்படவும், தொல்லைப்படுத்தப் படாமல் இருக்கவும் இது ஏற்றது." அல்லாஹ் மன்னிப்பவனாகவும், நிகரற்ற அன்புடையோனாகவும் இருக்கிறான்.

**அல்குர்ஆன: (33 : 59)**

திருக்குர்ஆன் 24:31 வது வசனத்தில் "பெண்கள் அலங்காரத்தை வெளிப்படையாகத் தெரிபவற்றைத் தவிர வேறு எதையும் வெளிப்படுத்தக் கூடாது" எனக் கூறப்படுகிறது.

இங்கே 'ஜீனத்' என்ற மூலச் சொல் பயன்படுத்தப்படுகிறது. ஜீனத் என்றால் அலங்காரம் என்பது பொருள்.அலங்காரம் என்பது இயற்கையாக ஒருவருக்கு அமைந்துள்ள அழகைக் குறிக்கும் சொல் அல்ல. மாறாக புறச் சாதனங்களால் ஏற்படுத்தப்படுகின்ற அழகே அலங்காரம் எனப்படும்.

உதட்டுச் சாயம் பூசுவது, நகைகளால் ஜோடனை செய்வது, 'மேக்கப்' பொருட்களைப் பயன்படுத்துவது, ஆடைகளால் அழகை அதிகரிப்பது, இவை ஜீனத் என்ற சொல்லில் அடங்கும்.

எனவே இவ்வசனத்தில் கூறப்படுகின்றவர்களைத் தவிர மற்றவர்களுக்கு முன் இது போன்ற உபரியான சாதனங்களால் அலங்காரம் செய்த நிலையில் பெண்கள் காட்சி தரக்கூடாது.

இவ்வசனத்தில் இடம் பெற்றுள்ள 'ஜீனத்' என்பதைச் சிலர் அழகு என விளங்கிக் கொண்டனர். அழகு வேறு, அலங்காரம் வேறு என்பதை அவர்கள் உணர்வதில்லை.

சீலையை பெண்கள் உடுத்தும் வழக்கம் நம் நாட்டில் உள்ளதால் இஸ்லாமிய பெண்களும் சீலையை உடுத்துகிறார்கள். ஆனால் இந்த ஆடை பெண்களின் இடுப்புப்பகுதியையும் முதுகுப்பகுதியையும் மணிக்கட்டிற்கு மேலே உள்ள கைப்பகுதிகளையும் வெளிப்படுத்திக் காட்டும் விதத்தில் அணியப்படுகிறது.

பின்வரும் செய்தியை கவனத்தில் வைத்துக்கொண்டு ஹிஜாப் விஷயத்தில் பேணுதலாக பெண்கள் நடந்துகொள்ள வேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நரகவாசிகளில் இரு வகையினரை (இன்னும்) நான் பார்க்கவில்லை. (அவர்களில் ஒரு வகையினர்) மாட்டின் வாலைப் போன்ற சாட்டைகளை வைத்து மக்களை அடித்துக்கொண்டிருப்பவர்களாவார்கள். (மற்றொரு வகையினர்) ஆடையணிந்தும் நிர்வாணிகளாக (காண்போரை) கவர்ந்திழுக்கும் பெண்கள். நீண்ட கழுத்தைக் கொண்ட ஒட்டகத்தின் சாய்ந்த திமிலைப் போன்று

தலையை சாய்த்துக் கொண்டு அவர்கள் நடப்பார்கள். இவர்கள் சொர்க்கத்தில் நுழைய முடியாது. அதன் வாடையையும் நுகரமாட்டார்கள்.

**அறிவிப்பவர் ; அபூஹுரைரா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (3971)**

**வெளிப்படுத்த அனுமதிக்கப்பட்டப் பகுதி**

பெண்கள் தமது உடல் அழகில் கைகள், முகங்கள் தவிர மற்றவைகளை மறைக்க வேண்டுமென்பதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் ஹதீஸ்களிலிருந்து விளங்கிக் கொள்ளலாம். நபி (ஸல்) அவர்களின் காலத்தில் பெண்கள் முகத்தை திறந்து இருந்ததற்கு பல சான்றுகள் உள்ளது.

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பெருநாள் தொழுகையில் கலந்து கொண்டேன் அப்போது அவர்கள் உரை நிகழ்த்துவதற்கு முன்பே தொழகை நடத்தினார்கள் பாங்கோ இகாமத்தோ இல்லை பிறகு பிலால் (ரலி) அவர்கள் மீது சாய்ந்து கொண்டு இறையச்சத்தை கடைபிடிக்கும் மாறும் இறைவனுக்கும் மாறும் வலியுறுத்தி மக்களுக்கு அறிவுரையும் நினைவூட்டலும் வலங்கினார்கள் பிறகு அங்கிருந்து புறப்பட்டு பெண்கள் பகுதிக்கு சென்று அவர்களுக்கும் நினைவூட்டி அறிவுரை பகர்ந்தார்கள் மேலும் பெண்களை நோக்கி தர்மம் செய்யுங்கள் நீங்கள் அதிகம் பேர் நரகத்தின் விறகு ஆவிர்கள் என்று கூறினார்கள் அப்போது பெண்கள் நடுவிலிருந்து கன்னங்கள் கருத்த ஒரு பெண்மனி எழுந்து ஏன் அல்லாஹ்வின் தூதரே என்று கேட்டார்கள் அதறட்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நீங்கள் அதிகமாக குறை கூறுகின்றீர்கள் நன்றி மறந்து கணவனை நிராகரிக்கின்றீர்கள் என்று கூறினார்கள் அப்போது அப்பெண்கள் தம் காதனிகள் மோதிரங்கள் உள்ளிட்ட அணிகலன்கனை பிலால் (ரலி) அவர்களின் ஆடையில் போட்டார்கள்.

**அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)**

**நூல்: முஸ்லிம் (1612)**

('விடைபெறும்' ஹஜ்ஜின்போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (என் சகோதரர்) ஃபள்ல் பின் அப்பாஸைத் தமக்குப் பின்னால் வாகனத்தில் அமர்த்திக் கொண்டார்கள். ஃபள்ல் மிகவும் அழகான வராயிருந்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள் மக்களுக்கு மார்க்க விளக்கம் அளிப்பதற்காகத் தமது வாகனத்தை நிறுத்தியிருந்தார்கள். (அப்போது) 'கஸ்அம்' குலத்தைச் சேர்ந்த அழகான பெண்ணொருத்தி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் மார்க்க விளக்கம் கேட்டு வந்தார். அப்போது ஃபள்ல் அப்பெண்ணைக் கூர்ந்து நோக்கலானார். அந்தப் பெண்ணின் அழகு அவருக்கு ஆச்சரியத்தை ஊட்டியது. நபி (ஸல்) அவர்கள் திரும்பிப் பார்த்தபோது ஃபள்ல் அப்பெண்ணைக் கூர்ந்து பார்ப்பதைக் கண்டார்கள். உடனே ஃபள்லின் முகவாயைத் தமது கரத்தால் பிடித்து அப்பெண்ணைப் பார்க்கவிடாமல் அவரது முகத்தைத் திருப்பி விட்டார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (6228)**

கொடுக்கல், வாங்கல் இன்ன பிற அலுவல்களில் ஈடுபடக் கைகள் மிகவும் அவசியம். அவற்றையும் மறைத்துக் கொண்டால் எந்தக் காரியத்திலும் பெண்கள் ஈடுபட இயலாத நிலை ஏற்படும்.

பெண்கள் முழங்காலிலிருந்து ஒரு முழம் வரை உள்ள பகுதிகளை மறைக்க வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். முழங்காலிலிருந்து ஒரு முழம் என்பது கரண்டை வரைக்கும் வரும். எனவே கரண்டைக்குக் கீழே உள்ள பாதத்தை மறைக்க வேண்டிய அவசியமில்லை என்பதை இதிலிருந்து விளங்கிக்கொள்ளலாம்.

பெருமைகொண்டவனாக தன் ஆடையை எவன் இழுத்துச் செல்கிறானோ அவனை அல்லாஹ் மறுமையில் (கருணை பார்வை) பார்க்கமாட்டான் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது உம்மு ஸலமா (ரலி) அவர்கள் பெண்கள் தங்களின் கீழாடையை எவ்வாறு தொங்கவிட்டுக்கொள்வார்கள் என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் (முழங்காலிலிருந்து) ஒரு ஜான் தொங்கவிடுவார்கள் என்று கூறினார்கள். அப்படியானால் பெண்களின் கால் தெரியுமே? என்று உம்மு ஸலமா (ரலி) அவர்கள் கேட்டதற்கு ஒரு முழும் தொங்கவிடுவார்கள். இதற்கு மேல் (ஆடையை) அதிகப்படுத்தக் கூடாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் ; இப்னு உமர் (ரலி)**

**நூல் : திர்மிதி (1653)**

**முகத்தை மறைப்பதில் தவறில்லை**

பெண்கள் முகத்தை மறைத்துக்கொள்வதற்கும் மார்க்கத்தில் அனுமதி வழங்கப்பட்டுள்ளது. நபி (ஸல்) அவர்களின் காலத்தில் பெண்கள் தங்கள் முகங்களை மறைத்துக்கொள்ளும் வழக்கமும் இருந்துள்ளது. அதை நபி (ஸல்) அவர்கள் தடைசெய்யவில்லை.

இஹ்ராம் அணிந்த பெண் முகத்திரையை அணியக்கூடாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**

**நூல் : புகாரி (1838)**

முகத்திரை அணியும் வழக்கம் நபி (ஸல்) அவர்களின் காலத்தில் இருந்ததால் இஹ்ராமின் போது மாத்திரம் அதை அணியக்கூடாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். எனவே இஹ்ராம் அணியாத மற்ற பெண்கள் முகத்திரை அணிவதற்கு தடை இல்லை என்பதை இதிலிருந்து விளங்கிக்கொள்ளலாம்.

நபி (ஸல்) அவர்களுடன் ஆயிஷா (ரலி) அவர்கள் ஒரு போருக்குச் சென்று திரும்பி வந்துகொண்டிருந்த போது இயற்கைத் தேவையை நிறைவேற்றிக்கொள்வதற்காக ஒரிடத்தில் ஆயிஷா (ரலி) அவர்கள் ஒட்டகச் சிவிகையில் இருந்து இறங்கினார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள் திரும்பி வருவதற்குள் படை சென்றுவிட்டது. ஸஃப்வான் பின் முஅத்தல் என்ற நபித்தோழர் ஆயிஷா (ரலி) அவர்கள் இருந்த இடத்திற்கு வந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் ஆயிஷா (ரலி) அவர்கள் தம் முகத்தை மறைத்துக்கொண்டார்கள்.

ஸஃப்வான் பின் முஅத்தல் என்னை அறிந்து கொண்டு இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹிராஜிஊன் (நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள். நாம் அவனிடமே திரும்பிச் செல்லவிருக்கிறோம்) என்று அவர் கூறிய சப்தத்தைக் கேட்டு நான் கண்விழித்தேன். உடனே என்னுடைய மேலங்கியால் முகத்தை மறைத்துக்கொண்டேன்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (4750)**

பெண்கள் முகத்தை மறைத்துக்கொள்வதை நபி(ஸல்) அவர்கள் கட்டாயமாக்கவுமில்லை. அதை அவர்கள் தடைசெய்யவுமில்லை. முகத்தை மறைப்பதும் மறைக்காமல் இருப்பதும் பெண்களின் சுய விருப்பமாகும். இதில் அவர்கள் எதை வேண்டுமானாலும் தேர்வு செய்துகொள்ளும் உரிமையை நபியவர்கள் பெண்களுக்கு வழங்கியுள்ளார்கள். நபியவர்கள் பெண்களுக்கு வழங்கிய இந்த உரிமைக்கு எதிராக யார் பேசினாலும் அவர்களின் கூற்றை நாம் மறுக்க வேண்டும்.

பெண்கள் முகத்தை மூடினால் தவறுகள் நடக்கிறது என்பது போன்ற காரணங்களை கற்பித்து இன்றைக்கு சில அறிவிலிகள் பெண்கள் முகத்தை மூடுவதை ஹராம் என்றும் இச்செயல் நிரந்தர நரகத்திற்குரியது எனவும் கூறி வருகின்றனர்.

நபிமொழியை ஆதாரமாகக் கொள்ளாமல் மனோஇச்சையை இவர்கள் ஆதாரமாகக் கொண்டதால் இதுபோல் உளறுகின்றனர். மார்க்கத்தில் தன் சுயஅறிவை புகுத்தி முஃமினான பெண்களை குற்றவாளிகளாக சித்தரிக்கும் இந்த வழிகேடர்கள் விசயத்தில் நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

**முக்காடு இல்லாமல் தொழக்கூடாது**

பருவ வயதையடைந்த பெண்கள் தலைமுடி தெரியும் வண்ணம் முக்காடு இல்லாமல் தொழுதால் அந்தத் தொழுகை இறைவனால் ஏற்றுக்கொள்ளப்படாது. எனவே கட்டாயமாக முக்காடை அணிந்து தான் தொழ வேண்டும்.

ஆயிஷா (ரலி) அவர்கள் உம்மு தல்ஹா (ரலி) அவர்களின் இல்லத்திற்கு வந்தார்கள். உம்மு தல்ஹாவின் பெண் மக்கள் முக்காடில்லாமல் தொழுவதைக் கண்டு உங்கள் மகள்கள் மாதவிடாய் ஏற்படும்

பருவத்தை எட்டியிருப்பார்கள் என்று நான் நினைக்கிறேன் என்று கூறினார்கள். உம்மு தல்ஹா ஆம் என்று கூறினார். மாதவிடாய் ஏற்படும் பருவத்தை இவர்கள் அடைந்திருக்கும் நிலையில் முக்காடில்லாமல் இவர்களில் யாரும் தொழ வேண்டாம். ஏனென்றால் (ஒரு முறை) என்னுடன் ஒரு வாலிபப் பெண் இருக்கும் போது நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். அவர்களின் கீழாடையை என்னிடத்தில் கொடுத்து இப்பெண்ணுக்கும் உம்மு ஸலமாவிடத்தில் இருக்கும் வாலிப்பபெண்ணிற்கும் இதை இரண்டாக கிழித்துக்கொடுத்துவிடு. ஏனென்றால் இவ்விருவரையும் பருவ வயதை அடைந்தவராகத் தான் நான் கருதுகிறேன் என்று கூறினார்கள் என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : முஹம்மத் (ரஹ்)**

**நூல் : அஹ்மத் (24823)**

**திருமணம் செய்ய தடைசெய்யப்பட்டவர்களுடன் இருக்கும் போது...**

பெண்கள் அண்ணிய ஆண்களிடம் முழுமையாக உடலை மறைக்க வேண்டியதைப் போன்று திருமணம் செய்வதற்கு தடை செய்யப்பட்ட நெருங்கிய உறவினர்களிடம் மறைக்க வேண்டிய அவசியம் இல்லை. இதை பின் வரும் நபி மொழிலிருந்து விளங்கிக் கொள்ளலாம்.

தமது பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளுமாறும் தமது கற்புகளைப் பேணிக் கொள்ளுமாறும் நம்பிக்கை கொண்ட பெண்களுக்குக் கூறுவீராக! அவர்கள் தமது அலங்காரத்தில் வெளியே தெரிபவை தவிர மற்றவற்றை வெளிப்படுத்த வேண்டாம். தமது முக்காடுகளை மார்பின் மேல் போட்டுக் கொள்ளட்டும். தமது கணவர்கள், தமது தந்தையர், தமது கணவர்களுடைய தந்தையர், தமது புதல்வர்கள், தமது கணவர்களின் புதல்வர்கள், தமது சகோதரர்கள், தமது சகோதரர்களின் புதல்வர்கள், தமது சகோதரிகளின் புதல்வர்கள், பெண்கள், தங்களுக்குச் சொந்தமான அடிமைகள், ஆண்களில் (தள்ளாத வயதின் காரணமாக பெண்கள் மீது) நாட்டமில்லாத பணியாளர்கள், பெண்களின் மறைவிடங்களை அறிந்து கொள்ளாத குழந்தைகள் தவிர மற்றவர்களிடம் தமது அலங்காரத்தை அவர்கள் வெளிப்படுத்த வேண்டாம்.

**அல்குர்ஆன் (24 : 31)**

நபி (ஸல்) அவர்கள் பாத்திமா (ரலி) அவர்களுக்கு ஒரு அடிமையை அன்பளிப்பாக கொடுத்தார்கள். பாத்திமா (ரலி) அவர்கள் மீது (சிறிய) ஆடை ஒன்று இருந்தது. அந்த ஆடை மூலம் அவர்கள் தலையை மூடினால் கால் வெளியே தெரிந்தது. காலை மூடினால் தலை தெரிந்தது. இதை நபி (ஸல்) அவர்கள் கவனித்த போது உன்னிடத்தில் உனது தந்தையும் அடிமையும் தான் இருக்கிறார்கள். அதனால் உன் மீது குறற்ம் இல்லை என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அனஸ் (ரலி)**

**நூல்: அபூதாவூத் (3582)**

**மற்ற பெண்களோடு நடந்துகொள்ளும் முறை**

மஹ்ரமான ( அதாவது திருமணம் செய்வதற்கு தடை செய்யப்பட்ட) ஆண்கள் முன்னால் பெண்கள் முழுமையான பர்தாவைப் பேண வேண்டிய அவசியம் இல்லை. இவர்களுக்கு முன்னால் காட்சித் தருவதைப் போன்றே மற்ற பெண்களுக்கு முன்னாலும் சாதாரணமான ஆடையில் பெண்கள் வருவது தவறு கிடையாது.

தமது பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளுமாறும் தமது கற்புகளைப் பேணிக் கொள்ளுமாறும் நம்பிக்கை கொண்ட பெண்களுக்குக் கூறுவீராக! அவர்கள் தமது அலங்காரத்தில் வெளியே தெரிபவை தவிர மற்றவற்றை வெளிப்படுத்த வேண்டாம். தமது முக்காடுகளை மார்பின் மேல் போட்டுக் கொள்ளட்டும். தமது கணவர்கள், தமது தந்தையர், தமது கணவர்களுடைய தந்தையர், தமது புதல்வர்கள், தமது கணவர்களின் புதல்வர்கள், தமது சகோதரர்கள், தமது சகோதரர்களின் புதல்வர்கள், தமது சகோதரிகளின் புதல்வர்கள், பெண்கள், தங்களுக்குச் சொந்தமான அடிமைகள், ஆண்களில் (தள்ளாத வயதின் காரணமாக பெண்கள் மீது) நாட்டமில்லாத பணியாளர்கள், பெண்களின் மறைவிடங்களை அறிந்து கொள்ளாத குழந்தைகள் தவிர மற்றவர்களிடம் தமது அலங்காரத்தை அவர்கள் வெளிப்படுத்த வேண்டாம்.

**அல்குர்ஆன் (24 : 31)**

என்றாலும் அந்தரங்க உறுப்புக்களை பெண்கள் மற்ற பெண்களிடம் காட்டுவது கூடாது. இவளது மர்ம உறுப்பை பார்க்கும் உரிமை அவளது கணவனுக்குத் தவிர வேறு யாருக்கும் இல்லை. இதை பின்வரும் ஹதீஸிலிருந்து விளங்கிக்கொள்ளலம்.

எங்கள் மறை உறுப்புகளில் எதை மறைக்க வேண்டும் எவற்றை மறைக்காமல் இருக்கலாம் என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன் அதற்கு நபி (ஸல்) அவர்கள் உன் மனைவி உன் அடிமை பெண்களிடம் தவிர மற்றவர்களிடம் உன் மறை உறுப்புக்களை பாதுகாத்து கொள் என்று விடையளித்தார்கள் ஒரு ஆண் இன்னொரு ஆணுடன் இருக்கும் போது மறை உறுப்பை காத்து கொள்ள வேண்டுமா? என்று கேட்டேன் அதற்கு நபி (ஸல்) அவர்கள் எவரும் பார்க்க முடியாதவாறு உம்மால் மறைத்துக்கொள்ள முடியுமானால் மறைத்துக்கொள் என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் ; முஆவியா பின் ஹைதா (ரலி)**

**நூல் : திர்மிதி (2693)**

ஒரு ஆண் மற்ற ஆண்களிடத்தில் மறை உறுப்பை வெளிப்படுத்துவதை தடுக்கப்பட்டுள்ளது. இதேச் சட்டம் பெண்களுக்கும் உரியதாகும்.

ஒரு ஆண் மற்றொரு ஆணுடைய மறை உறுப்பை பார்க்க வேண்டாம் ஒரு பெண் மற்றொரு பெண்ணுடைய மறும உறுப்பை பார்க்க வேண்டாம் ஒரு ஆன் மற்றொரு ஆணுடன் ஒரு ஆடைக்குள் படுக்க வேண்டாம் ஒரு பெண் மற்றொரு பெண்ணோடு ஒரு ஆடைக்குள் படுக்க வேண்டாம் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அபூ சயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல்: முஸ்லிம் 512**

ஒரே ஆடைக்குள் இரு பெண்கள் படுப்பது தவறு என்றும் மேலுள்ள ஹதீஸ் உணர்த்துகிறது.

## ஆண்களுடன் தனித்திருக்கக்கூடாது

மேற்கண்ட (24 : 31) வசனத்தில் சொல்லப்பட்டவர்களைத் தவிர்த்து மற்றவர்களிடத்தில் பெண்கள் பர்தாவை கட்டாயம் கடைபிடிக்க வேண்டும். பெரும்பாலான பெண்கள் கணவனுடைய அண்ணன் தம்பிமார்களின் முன்பு சர்வசாதாரணமாக பர்தா இல்லாமல் வந்து செல்கிறார்கள். அவர்களுடன் தனித்திருப்பதை பெரிய குற்றமாக இவர்கள் கருதுவதில்லை. இது தவறாகும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(அந்நியப்) பெண்கள் இருக்குமிடத்திற்குச் செல்ல வேண்டாம் என உங்களை நான் எச்சரிக்கிறேன்" என்று கூறினார்கள். அப்போது அன்சாரிகளில் ஒருவர், "அல்லாஹ்வின் தூதரே! கணவருடைய (சகோதரன் போன்ற) உறவினர்கள் (அவள் இருக்கும் இடத்திற்குச் செல்வது) குறித்து தாங்கள் என்ன கூறுகின்றீர்கள்?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "கணவருடைய (சகோதரன் போன்ற) உறவினர்கள் மரணத்திற்கு நிகரானவர்கள்" என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : உக்பது பின் ஆமிர் (ரலி)**

**நூல் : புகாரி (5232)**

"ஒரு பெண்ணுடன் எந்த (அன்னிய) ஆடவனும் தனிமையில் இருக்கலாகாது; (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய உறவினருடன் (அவள்) இருக்கும்போது தவிர!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (5233)**

## பெண்கள் ஜனாஸாவை ஆண்கள் பார்க்கலாமா?

இறந்த பெண்ணின் முகத்தை ஆண் பார்ப்பதற்கும் இறந்துவிட்ட ஆணின் முகத்தை பெண் பார்ப்பதற்கும் மார்க்கத்தில் எந்தத் தடையும் இல்லை. மற்றவர்களை ஆசை உணர்வுடனும் தவறான எண்ணத்துடனும் பார்ப்பது தான் தடைசெய்யப்பட்டுள்ளது. நபியவர்களின் காலத்தில் பெண்கள் தங்கள் முகத்தை திறந்திருந்தார்கள் என்பதை பல ஹதீஸ்களில் காணுகிறோம்.

உயிருடன் இருக்கும் போது எம்முறையில் பார்ப்பது அனுமதிக்கப்பட்டிருக்கிறதோ அம்முறையில் இறந்தவரைப் பார்ப்பதில் குற்றமில்லை. உயிருடன் இருக்கும் போது எந்த எண்ணத்தில் மற்றவர்களைப் பார்க்கக்கூடாதோ அவ்வெண்ணத்தில் இறந்தவர்களையும் பார்க்கக்கூடாது.

**பட்டாடை அணியலாம்**

ஆண்கள் பட்டாடை அணிவதற்கு தடை உள்ளது. ஆனால் பெண்களுக்கு அனுமதி தரப்பட்டுள்ளது.

நபி (ஸல்) அவர்கள் எனக்குக் கோடு போட்ட பட்டு அங்கி ஒன்றை (அன்பளிப்பாக) வழங்கினார்கள். ஆகவே, அதை நான் அணிந்துகொண்டேன். (இதைக் கண்ட) நபி (ஸல்) அவர்களின் முகத்தில் கோபக் குறியை நான் பார்த்தேன். உடனே, அதைப் பல துண்டுகளாக்கி எங்கள் (குடும்பப்) பெண்களிடையே பங்கிட்டுவிட்டேன்.

**அறிவிப்பவர் : அலீ (ரலி)**

**நூல் : புகாரி (5366)**

**காவிநிற ஆடையை அணியலாம்**

காவிநிறத்தை அதாவது குங்குமப்பூ நிறத்தை ஆண்கள் பயன்படுத்துவது கூடாது. பெண்களுக்கு பயன்படுத்திக்கொள்ள அனுமதி தரப்பட்டுள்ளது.

ஆண்கள் (தங்களது மேனியில்) குங்குமப்பூச் சாயமிட்டுக்கொள்வதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

**அறிவிப்பவர் : அனஸ் (ரலி)**

**நூல் : புகாரி (5846)**

பெண்கள் இஹ்ராம் நிலையில் இருக்கும் போது முகத்திரையையும் கையுறைகளையும் குங்குமப்பூச் சாயம் மற்றும் வர்ஸ் எனும் செடியின் சாயம் தோய்ந்த ஆடையையும் அணிவதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைசெய்தார்கள். அதற்குப் பிறகு (சாதாரண நேரத்தில்) அவள் விரும்பும் வண்ண ஆடைகளையும் குங்குமப்பூ நிறத்திலுள்ள ஆடையையோ பட்டாடையையோ ஆபரணத்தையோ சிர்வாலையோ நீளங்கியையோ காலுறையையோ அணிந்துகொள்ளட்டும் என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**

**நூல் : அபூதாவுத் (1556)**

**ஆண்களின் ஆடைகளை அணியக்கூடாது**

ஆண்கள் பெண்களைப் போன்று நடப்பதையும் பெண்கள் ஆண்களைப் போன்று நடப்பதையும் நபி (ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள். ஆனால் இன்றைக்கு நாகரீகம் என்ற பெயரில் ஆண்களின் ஆடைகளை பெண்கள் அணிந்துகொண்டு இருக்கிறார்கள். இது தவறாகும்.

நபி (ஸல்) அவர்கள் பெண்களைப் போன்று ஒப்பனை செய்து கொள்ளும் ஆண்களையும் ஆண்களைப் போன்று ஒப்பனை செய்து கொள்ளும் பெண்களைளும் சபித்தார்கள் .

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)

நூல்: புகாரி (5885)

**காது மூக்கு குத்தலாமா?**

காது குத்தக்கூடாது என்று தெளிவாக எந்த ஒரு தடையும் வரவில்லை. மாறாக அல்லாஹ் படைத்த படைப்பில் மாற்றம் செய்யக்கூடாது என்று மார்க்கத்தில் பொதுவாக சொல்லப்பட்டிருக்கிறது. காதுகளை கிழிப்பதும் அல்லாஹ்வின் படைப்பில் மாற்றம் செய்வதும் ஷைத்தானுடைய செயல் என்று குர்ஆன் கூறுகிறது.

"அவர்களை வழி கெடுப்பேன்; அவர்களுக்குத் தவறான) ஆசை வார்த்தை கூறுவேன்; அவர்களுக்குக் கட்டளையிடுவேன்; அவர்கள் கால்நடைகளின் காதுகளை அறுப்பார்கள். (மீண்டும்) அவர்களுக்குக் கட்டளை யிடுவேன்; அல்லாஹ் வடிவமைத்ததை அவர்கள் மாற்றுவார்கள்" (எனவும் கூறினான்). அல்லாஹ்வையன்றி ஷைத்தானைப் பொறுப்பாளனாக்கிக் கொள்பவன் வெளிப்படையான நஷ்டத்தை அடைந்து விட்டான்.

அல்குர்ஆன் (4 : 119)

இயற்கையாக அல்லாஹ் படைத்த உறுப்புக்களில் மாற்றம் செய்வதை நபி (ஸல்) அவர்களும் தடைசெய்துள்ளார்கள்.

பச்சை குத்திவிடும் பெண்கள், பச்சை குத்திக்கொள்ளும் பெண்கள், முகத்தில் முளைத்திருக்கும் முடிகளை அகற்றக் கேட்டுக் கொள்ளும் பெண்கள், அழகிற்காக அரத்தால் தேய்த்துப் பல்வரிசையைப் பிரித்துக் கொள்ளும் பெண்கள், (மொத்தத்தில்) இறைவன் அளித்த உருவத்தை மாற்றிக்கொள்ள முயலும் பெண்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்! நபி (ஸல்) அவர்கள் சபித்தார்கள்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி)

நூல் : புகாரி (5931)

இந்த பொதுவான ஆதாரங்களின் அடிப்படையில் காது குத்துவதும் கூடாது என்று ஒரு சாரார் கூறுகின்றனர். இது தவறாகும். பெண்கள் காது குத்துவதற்கு நபிவழியில் எந்த ஆதாரமும் இல்லையென்றால் அப்போது இந்த பொதுவான ஆதாரத்தின் அடிப்படையில் இவ்வாறு முடிவெடுக்கலாம்.

பெண்கள் காது குத்துவதற்கு நேரடியாக நபிமொழிகளில் ஆதாரங்கள் உள்ளன. எனவே பெண்கள் காது குத்துவது மேற்கண்ட ஆதாரங்களிலிருந்து விதிவிலக்கல் பெற்ற அனுமதிக்கப்பட்ட காரியமாகும். இதற்கான சான்றுகளை அறிந்துகொள்வோம்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு பெருநாள் தினத்தில் உரையாற்றிவிட்டு) பெண்கள் செவியேற்கும் விதத்தில் தாம் பேசவில்லை என்று எண்ணியவர்களாக (பெண்களிருக்கும் பகுதிக்கு) பிலால் (ரலி) அவர்களுடன் புறப்பட்டுச் சென்றார்கள். அங்கு பெண்களுக்கு அறிவுரை கூறிவிட்டு தர்மம் செய்யும்படி

வயுறுத்தினார்கள். அங்கிருந்த பெண்கள் தங்கள் காதணிகளையும், மோதிரங்களையும் (கழற்றிப்) போடலானார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (98)**

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் நபித்தோழியர்கள் காதுகளில் ஆபரணங்களை அணிந்துள்ளனர். இதை நபி(ஸல்) அவர்கள் கண்டிக்கவில்லை. காது குத்துவது ஹராமான செயலாக இருந்தால் இந்த சபையில் நபி(ஸல்) அவர்கள் அதை உணர்த்தி இருப்பார்கள். எனவே பெண்கள் காதுகுத்தலாம் என்பதை இதிலிருந்து அறிய முடிகிறது. இன்னொரு செய்தியும் இதற்கு சான்றாக அமைந்துள்ளது.

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள் :

(முற்காலத்தில்) பதினொன்று பெண்கள் (ஓரிடத்தில் கூடி) அமர்ந்துகொண்டு ஒவ்வொரு வரும் தத்தம் கணவர் குறித்த செய்திகளில் எதையும் மூடி மறைக்காமல் (உள்ளதை உள்ளபடி) எடுத்துரைப்பதென உறுதிமொழியும் தீர்மானமும் எடுத்துக்கொண்டனர்.

அவர்களில் ஒரு பெண் கூறினார்:

என் கணவர் (பெயர்) அபூஸர்உ. அபூஸர்உ எத்தகையவர் தெரியுமா? ஆபரணங்களை அவர் என் காதுகளில் ஊஞ்சலாடச் செய்திருக்கிறார். (ஆசையாசையாக உணவளித்து) என் கொடுங்கைகளை கொழுக்கச் செய்துள்ளார். அவர் என்னைப் பூரிப்படையச் செய்திருக்கிறார். என் மனம் நிறைந்திருக்கிறது.

ஆயிஷா ரலி அவர்கள் கூறுகின்றார்கள்:

(என்னருமைக் கணவரான) அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), "(ஆயிஷாவே!) உம்மு ஸர்உவிற்கு அபூ ஸர்உ எப்படியோ அப்படியே உனக்கு நானும் (அன்பாளனாக) இருப்பேன்" என்றார்கள்.

**நூல் : புகாரி (5189)**

அபூ ஸர்உ என்பவர் தன் மனைவிக்கு காதுகளில் ஆபரணங்களை அணிவித்துள்ளார். இதை நபி(ஸல்) அவர்கள் அங்கீகரித்துள்ளார். எனவே பெண்கள் காது குத்துவதில் தவறேதுமில்லை.

காது குத்துவதற்கு இவ்வாறு தெளிவான ஆதாரங்கள் இருப்பதை போல் மூக்கு குத்துவதற்கு எந்த ஆதாரமும் இல்லை. படைப்பில் மாற்றம் செய்யக்கூடாது என்ற பொதுவான விதியின் அடிப்படையில் மூக்கு குத்துவது தவறான காரியாகும்.

பெண்கள் அந்நிய ஆண்களிடம் தங்களின் அலங்காரத்தை வெளிப்படுத்தக்கூடாது. மூக்கு குத்திய பெண்கள் முகத்தை திறந்திருக்கும் போது அவர்களின் மூக்குத்தி அலங்காரத்தை அந்நிய ஆண்களிடம் வெளிப்படுத்துகின்றனர். இது தவறாகும்.

**பெண்களுக்கு கத்னா செய்யலாமா?**

பெண்களுக்கும் கத்னா செய்ய வேண்டும் என்றக் கருத்தில் சில ஹதீஸ்கள் வருகிறது. அவற்றை அறிவிப்பவர்கள் பலவீனமானவர்களாக இருப்பதால் அவற்றை ஏற்றுக்கொள்ள முடியாது. எனவே இதை செய்ய வேண்டிய அவசியமில்லை.

**அணிகலன்களை அணியலாம்**

விரும்புகின்ற நகைகளை அணிவதற்கு பெண்களுக்கு மார்க்கத்தில் அனுமதியுள்ளது. தங்கம் வெள்ளி பிளாட்டினம் முத்து பவளம் போன்ற விலையுயர்ந்தப் பொருட்களை அணிவதற்கு எந்தத் தடையும் இல்லை. நபி (ஸல்) அவர்களின் காலத்தில் பெண்கள் ஆபரணங்களை அணிந்துள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு பெருநாள் தினத்தில் உரையாற்றிவிட்டு) பெண்கள் செவியேற்கும் விதத்தில் தாம் பேசவில்லை என்று எண்ணியவர்களாக (பெண்களிருக்கும் பகுதிக்கு) பிலால் (ரலி) அவர்களுடன் புறப்பட்டுச் சென்றார்கள். அங்கு பெண்களுக்கு அறிவுரை கூறிவிட்டு தர்மம் செய்யும்படி வலியுறுத்தினார்கள். அங்கிருந்த பெண்கள் தங்கள் காதணிகளையும், மோதிரங்களையும் (கழற்றிப்) போடலானார்கள். பிலால் (ரலி) அவர்கள் தமது ஆடையின் ஓரத்தில் அவற்றைப் பெற்றுக் கொண்டிருந்தார்கள் என நான் உறுதியளிக்கிறேன்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ்**

**நூல் : புகாரி (98)**

என்றாலும் இவையெல்லாம் அலங்காரம் என்பதால் இந்த அலங்காரத்தை அண்ணிய ஆண்களிடம் வெளிப்படுத்தக்கூடாது.

தமது பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளுமாறும் தமது கற்புகளைப் பேணிக் கொள்ளுமாறும் நம்பிக்கை கொண்ட பெண்களுக்குக் கூறுவீராக! அவர்கள் தமது அலங்காரத்தில் வெளியே தெரிபவை தவிர மற்றவற்றை வெளிப்படுத்த வேண்டாம்.

**அல்குர்ஆன் (24 : 31)**

**நக பாலீஷ் பூசலாமா?**

ஒரு பொதுவான அடிப்படையை விளங்கிக்கொண்டால் பல கேள்விகளுக்குரிய பதில்கள் நமக்குக் கிடைத்துவிடும். மார்க்க சட்டத்திட்டங்களுக்கு இடையூராக அமையாத அலங்காரப்பொருட்கள் எதை வேண்டுமானலும் நாம் பயன்படுத்திக்கொள்வதில் தவறில்லை. மார்க்கத்தை கடைபிடிப்பதற்கு இடஞ்சலாக அமைந்த அலங்காரப் பொருட்களை பயன்படுத்துவது கூடாது.

உளூ செய்யும் போது கழுவப்பட வேண்டிய உறுப்புக்கள் முழுவதிலும் அவசியம் தண்ணீர் பட வேண்டும் என்பது மார்க்கச் சட்டம். அறைகுறையாகக் கழுகுவது தடுக்கப்பட்டிருக்கிறது.

நாங்கள் மேற்கொண்ட பயணம் ஒன்றில் அல்லாஹ்வின் (ஸல்) அவர்கள் எங்களுக்குப் பின்னே (பிந்தி) வந்துகொண்டிருந்தார்கள். அஸ்ர் தொழுகையின் நேரம் எங்களை நெருங்கிவிட்ட நிலையில் நாங்கள் (அவசர அவசரமாக) உளூ (அங்கசுத்தி) செய்து கொண்டிருக்கும்போது எங்களிடம் வந்து சேர்ந்தார்கள். அப்போது நாங்கள் (கால்களை முறைப்படி கழுவாமல்) எங்கள் கால்கள் மீது தண்ணீர் தொட்டுத் தடவி (மஸ்ஹு செய்து) கொள்ளலானோம். (அதைக் கண்ட) நபி (ஸல்) அவர்கள் "குதிகால்களைச் சரியாகக் கழுவாதவர்களுக்கு நரகம்தான்!" என்று இரண்டு அல்லது மூன்று தடவை தமது குரலை உயர்த்திச் சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி)**

**நூல் : புகாரி (96)**

இன்றைக்கு விற்கப்படும் நகப்பூச்சுக்கள் தண்ணீர் ஊடுருவுவதை தடுக்கக்கூடியவையாக உள்ளது. இவற்றைப் பூசிக்கொண்டு உளூ செய்யும் போது நகங்களின் மீது தண்ணீர்படுவது தடுக்கப்படுகிறது. எனவே தொழுகை அல்லாத மற்ற நேரங்களில் பூசிக்கொள்வதில் தவறில்லை. உளூ செய்யும் போது இவற்றை அகற்றிவிட வேண்டும்.

தண்ணீர் ஊடுருவதை தடுக்காத வகையில் நகப்பூச்சு கண்டுபிடிக்கப்பட்டால் அவற்றை எப்போது வேண்டுமானாலும் பயன்படுத்திக்கொள்ளலாம்.

**பெண்கள் நறுமணம் பூசலாமா?**

பிறரை கவர்ந்திழுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் நறுமணம் பூசுவதை மார்க்கம் தடைசெய்துள்ளது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் ஒரு பெண் நறுமணத்தைப் பூசிக்கொண்டு தன் வாடையை (பிறர்) நுகர வேண்டும் என்பதற்காக ஒரு கூட்டத்தை கடந்து சென்றால் அவள் விபச்சாரியாவாள்.

**அறிவிப்பவர் : அபூ மூஸா (ரலி)**

**நூல் : நஸயீ (5036)**

பிறர் நுகர வேண்டும் என்பதற்காக என்று நபி (ஸல்) அவர்கள் கூறும் வார்த்தை கவனிக்கத்தக்கதாகும். தவறான எண்ணமில்லாமல் துர்நாற்றத்தைப் போக்குவதற்காக பூசுவது தவறில்லை என்பது இதிலிருந்து விளங்குகிறது.

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் பெண்கள் நறுமணத்தை பயன்படுத்தியுள்ளார்கள். இஷாத் தொழுகைக்கு வரும் போது மாத்திரம் நறுமணத்தை தவிர்த்துக் கொள்ளுமாறு பெண்கள் கட்டளையிடப்பட்டார்கள். மற்றத் தொழுகைகளுக்கு வரும் போதோ அல்லது தொழுகை அல்லாத மற்ற நேரங்களிலோ நறுமணம் பூசக்கூடாது என்றோ அவர்களுக்கு தடை விதிக்கப்படவில்லை.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் எந்தப் பெண் நறுமணப் புகையை பயன்படுத்தினாரோ அவர் கடைசித் தொழுகையான இஷாவில் நம்முடன் கலந்துகொள்ள வேண்டாம்.

**அறிவிப்பர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (675)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து (வீட்டில்) உறங்கினார்கள். அப்போது அவர்களுக்கு வியர்வை வெளிப்பட்டது. எனது தாய் ஒரு கண்ணாடிக் குடுவையைக் கொண்டு வந்து அதில் நபி (ஸல்) அவர்களின் வியர்வையை சேகரித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் விழித்துவிட்டார்கள். உம்மு சுலைமே நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்று கேட்டார்கள். அதற்கு (எனது தாய்) உம்மு சுலைம் இது உங்களின் வியர்வை. இது நறுமணங்களில் சிறந்த நறுமணமாக இருப்பதால் இதை நாங்கள் எங்களின் நறுமணத்துடன் சேர்த்துக்கொள்வோம்.

**அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (4300)**

நறுமணத்தைப் போன்றே பூக்களையும் பிறரைக் கவரும் நோக்கத்தில் பயன்படுத்தக் கூடாது. தவறான எண்ணமில்லாமல் பூவின் அழகை விரும்பியோ அதன் வாசனையை வரும்பியோ பூக்களை சூட்டிக்கொண்டால் அதில் தவறு ஏதும் இல்லை.

ஆண்களின் கவனத்தை ஈர்க்கும் விதத்தில் எந்தக் காரியத்தையும் ஒரு பெண் செய்யக்கூடாது என்பதால் பலரது கவனத்தை ஈர்க்கும் வகையில் அமைந்த அதிக நறுமணத்தைத் தருகின்ற வாசனை திரவியங்களை பெண்கள் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

## ஒட்டுமுடி வைக்கலாமா?

ஒட்டுமடி வைத்துக்கொள்வதை நபி (ஸல்) அவர்கள் தடைசெய்துள்ளார்கள்.

அன்சாரிப் பெண்ணொருவர் மணம் புரிந்துகொண்டார். பிறகு அவர் நோயுற்று விட அதன் காரணத்தால் அவருடைய தலைமுடி கொட்டிவிட்டது. ஆகவே, அவருடைய உறவினர்கள் அவருக்கு ஒட்டு முடிவைக்க விரும்பி நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், “ஒட்டுமுடி வைத்துவிடுபவளையும் ஒட்டுமுடி வைத்துக்கொள்பவளையும் அல்லாஹ் சபிக்கின்றான். (தன் கருணையிலி ருந்து அப்புறப்படுத்துகின்றான்)” என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் ; ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (5934)**

## பெண்கள் மொட்டை அடிக்கலாமா?

பெண்கள் முடியை குறைத்துக்கொள்வது தவறில்லை. ஆனால் மொட்டையடிப்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைசெய்துள்ளார்கள்.

பெண் தலையை மொட்டையடித்துக் கொள்வதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடைசெய்துள்ளார்கள்.

**அறிவிப்பவர் : அலீ (ரலி)**

**நூல் : நஸயீ (4963)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் மொட்டையடிப்பதென்பது பெண்களுக்குக் கிடையாது. முடியை குறைத்துக்கொள்வது தான் அவர்களுக்கு உண்டு என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : தாரமீ (1826)**

தலையில் புண் இருந்தாலோ முடி வைப்பதினால் நோய் ஏற்பட்டாலோ அப்போது மொட்டையடிப்பதில் தவறில்லை. உடல்நலத்தை கவனத்தில் கொண்டு சிறுமிகளுக்கு மொட்டையடிப்பதும் தவறில்லை.

**பச்சை குத்திக்கொள்ளக் கூடாது**

இன்றைய நவீன காலத்தில் பெண்கள் அழகிற்காக பற்களை செதுக்கிக்கொள்கிறார்கள். அழகு நிலையங்களுக்குச் சென்று புருவத்தை மளித்து விட்டு விரும்பி வடிவில் செயற்கையாக புருவங்களை வைத்துக்கொள்கிறார்கள். தங்களுக்குப் பிடித்தமானவர்களின் பெயரை உடம்பில் பச்சை குத்திக்கொள்கிறார்கள். இதையெல்லாம் நபி (ஸல்) அவர்கள் தடைசெய்துள்ளார்கள்.

பச்சை குத்திவிடும் பெண்கள், பச்சை குத்திக்கொள்ளும் பெண்கள், முகத்தில் முளைத்திருக்கும் முடிகளை அகற்றக் கேட்டுக் கொள்ளும் பெண்கள், அழகிற்காக அரத்தால் தேய்த்துப் பல்வரிசையைப் பிரித்துக் கொள்ளும் பெண்கள், (மொத்தத்தில்) இறைவன் அளித்த உருவத்தை மாற்றிக்கொள்ள முயலும் பெண்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்! நபி (ஸல்) அவர்கள்

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி)**

**நூல் : புகாரி (5931)**

**விதவைப் பெண்கள் அலங்கரித்துக்கொள்ளலாமா?**

கணவனை இழந்தை பெண்கள் நான்கு மாதம் பத்து நாட்கள் மாத்திரம் அலங்காரம் செய்யாமல் தவிர்த்துக்கொள் வேண்டும். அதற்குப் பிறகு அவர்கள் பூ வைத்துக்கொள்ளலாம். வண்ண ஆடைகளை உடுத்தலாம். தான் விரும்பும் ஆணை திருமணம் செய்துகொள்ளலாம். விரும்பியவாறு தன்னை அலங்கரித்துக்கொள்ளலாம்.

ஆனால் இன்றைக்கு சமுதாயத்தில் விதவைப் பெண்கள் அலங்கரிக்கக்கூடாது. வண்ண ஆடைகளை உடுத்தக் கூடாது என்றெல்லாம் பலவிதமான மூட நம்பிக்கைகள் நிலவுகிறது. இது பெண்களுக்கு இழைக்கப்படும் பெரும் கொடுமையாகும். இதற்கு மார்க்கத்தில் அனுமதியில்லை.

## திருமணச் சட்டங்கள்

**திருமணத்திற்கு பெண்ணுடைய சம்மதம்**

தனக்குப் பிடித்தக் கணவனை தன் விருப்பப்படி தேர்வு செய்வதற்கு பெண்ணிற்கு முழுமையாக இஸ்லாத்தில் உரிமை வழங்கப்பட்டுள்ளது. பெண்ணுடைய விருப்பமில்லாமல் நடத்தப்படும் திருமணம் செல்லாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள், “கன்னிகழிந்த பெண்ணை, அவளது (வெளிப்படையான) உத்தரவு பெறாமல் மணமுடித்துக் கொடுக்க வேண்டாம். கன்னிப் பெண்ணிடம் (ஏதேனும் ஒருமுறையில்) அனுமதி பெறாமல் மண முடித்துக் கொடுக்க வேண்டாம்” என்று சொன்னார்கள். மக்கள், “அல்லாஹ்வின் தூதரே! எப்படி கன்னியின் அனுமதி(யைத் தெரிந்துகொள்வது)” என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், “அவள் மௌனம் சாதிப்பதே (அவளது சம்மதம்) என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (5136)**

கன்னி கழிந்த பெண்ணான என்னை என் தந்தை (ஒருவருக்கு) மணமுடித்துவைத்தார்கள். எனக்கு இதில் விருப்பமிருக்கவில்லை. ஆகவே, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் போ(ய் என் விருப்பத்தைச் சொன்)னேன். அத்திருமணத்தை நபி (ஸல்) அவர்கள் ரத்துச் செய்தார்கள்.

**அறிவிப்பவர் : கன்ஸா பின்த் கிதாம் அல்அன்சாரியா (ரலி)**

**நூல் : புகாரி (5138)**

**திருமணப் பொருத்தம்**

ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் தன் வாழ்க்கைத் துணையை தேர்வு செய்யும் போது ஒழுக்கத்தையும் மார்க்கப்பிடிப்பபையும் முதலில் கவனத்தில் கொண்டு தேர்வு செய்ய வேண்டும். இதற்கடுத்து பெண்கள் கணவன் செல்வந்தனாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பதில் தவறில்லை.

கெட்ட பெண்கள், கெட்ட ஆண்களுக்கும் கெட்ட ஆண்கள், கெட்ட பெண்களுக்கும் (உரியோர்). நல்ல பெண்கள், நல்ல ஆண்களுக்கும் நல்ல ஆண்கள், நல்ல பெண்களுக்கும் (தகுதியானோர்).

**அல்குர்ஆன் (24 : 26)**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நான்கு நோக்கங்களுக்காக ஒரு பெண் மணமுடிக்கப்படுகிறாள்:

1. அவளது செல்வத்திற்காக.

2. அவளது குடும்பப் பாரம்பரியத்திற்காக.

3. அவளது அழகிற்காக.

4. அவளது மார்க்க (நல்லொழுக்க)த் திற்காக. ஆகவே, மார்க்க (நல்லொழுக்க)ம் உடையவளை (மணந்து) வெற்றி அடைந்து கொள்! (இல்லையேல்) உன்னிரு கரங்களும் மண்ணாகட்டும்!

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (5090)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (வந்து), முஆவியா பின் அபீசுஃப்யான் (ரலி) அவர்களும் அபூஜஹ்ம் பின் ஹுதைஃபா (ரலி) அவர்களும் என்னைப் பெண் கேட்கின்றனர்" என்று சொன்னேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அபூஜஹ்ம் தமது கைத்தடியைத் தோளிருந்து கீழே வைக்கமாட்டார். (கோபக்காரர்; மனைவியரைக் கடுமையாக அடித்துவிடுபவர்). முஆவியோ, அவர் ஓர் ஏழை; அவரிடம் எந்தச் செல்வமும் இல்லை. நீ உசாமா பின் ஸைதை மணந்துகொள்" என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (2953)**

**மஹர் வாங்குதல்**

குடும்ப வாழ்க்கையில் பெண்ணாகிறவள் கணவனுக்கு பணிவிடை செய்வது அவனது விருப்பத்தை நிறைவேற்றுவது குழந்தையை பெற்றெடுப்பது போன்ற பல பணிகளை செய்கிறாள். இதனால் பெண்ணே அதிக துன்பத்தை அனுபவிக்க வேண்டியுள்ளது. இதை கவனத்தில் வைத்து இஸ்லாம் ஆண்கள் பெண்களுக்கு அவர்கள் கேட்கின்ற மஹர் என்ற மணக்கொடையை தர வேண்டும் என்று கூறுகிறது.

திருமணத்தின் போதே ஒரு பெரும் தொகையை மனைவி வாங்கிக்கொண்டால் பிற்காலத்தில் கணவனால் அவள் விடப்படும் போது அதை வைத்து தன் தேவையை நிறைவேற்றிக்கொள்ள இயலும். இதை பெரும்பாலான பெண்கள் உணராத காரணத்தினால் மஹர் தொகையை கணவனிடமிருந்து வாங்குவதில்லை. அப்படி வாங்கினாலும் கணவன் கொடுப்பது குறைவாக இருந்தாலும் பராவயில்லை என்று வாங்கிக்கொள்கிறார்கள்.

சமுதாயத்தில் நிலவும் வரதட்சனை கொடுமையின் காரணத்தினால் தான் பெண்கள் மஹர் விஷயத்தில் அலட்சியம் காட்டுகிறார்கள். பெண்களிடம் வரதட்சனைக் கேட்டு கசக்கிப்புலியும் கேடுகெட்ட மாப்பிள்ளைகள் அல்லாஹ்விற்கு பயந்து நடந்துகொள்ள வேண்டும்.

பெண்களுக்கு அவர்களின் மணக் கொடைகளை கட்டாயமாகக் கொடுத்து விடுங்கள்! அவர்களாக மனமுவந்து அதில் எதையேனும் விட்டுத் தந்தால் மனநிறைவுடனும், மகிழ்வுடனும் அதை உண்ணுங்கள்!

**அல்குர்ஆன் (4 : 4)**

அப்பெண்களில் (திருமணத்தின் மூலம்) யாரிடம் இன்பம் அனுபவிக்கிறீர்களோ அவர்களுக்குரிய மணக்கொடைகளை கட்டாயமாக அவர்களிடம் கொடுத்து விடுங்கள். நிர்ணயம் செய்த பின் ஒருவருக் கொருவர் திருப்தியடைந்தால் உங்களுக்குக் குற்றம் இல்லை.

ஒரு பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் தம்மை (அர்ப்பணித்து) அன்பளிப்புச் செய்துவிட்டதாகக் கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(இனி) எனக்கு எந்தப் பெண்ணும் தேவையில்லை" என்று சொன்னார்கள். அப்போது அங்கிருந்த ஒரு மனிதர் "இந்தப் பெண்ணை எனக்கு மணமுடித்து வையுங்கள்!" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், "ஏதேனும் ஆடையொன்றை அவளுக்கு ('மஹ்ர்' எனும் விவாகக் கொடையாக)க் கொடு!" என்று (அந்த மனிதரிடம்) சொன்னார்கள். அவர், "என்னிடம் இல்லை" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், "அவளுக்கு (எதையேனும் மஹ்ராகக்) கொடு! அது இரும்பாலான மோதிரமாக இருந்தாலும் சரியே" என்று சொன்னார்கள். இதைக் கேட்டு அந்த மனிதர் கலங்கினார். எனவே, நபி (ஸல்) அவர்கள், "குர்ஆனிலிருந்து உன்னிடம் என்ன (அத்தியாயம் மனனமாக) இருக்கிறது?" என்று கேட்டார்கள். அவர் இன்ன இன்ன அத்தியா யங்கள் (எனக்கு மனப்பாடமாக) உள்ளன" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், "உம்முடன் இருக்கும் குர்ஆன் அத்தியாயங்களுக்காக இவளை உமக்கு மணமுடித்து வைத்தேன்" என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : சஹ்ல் பின் சஅத் (ரலி)**

**நூல் : புகாரி (5029)**

### மனைவியின் பொருள் மனைவிக்கே உரியதாகும்

மனைவியிடத்தில் இருக்கும் செல்வம் கணவனுக்கு உரியது என்று அதிகமான மக்கள் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இதனால் மனைவியின் ஆபரணங்களை கணவன் கேட்கும் போது இவ்வாறு கேட்பதற்கு அவனுக்கு உரிமை உள்ளது என்று நினைத்துக் கொண்டு விருப்பமில்லாமலேயே அவனிடத்தில் கொடுத்து விடுகிறார்கள்.

இது தவறான நம்பிக்கை. தனக்குக் கிடைக்கின்ற பொருளை தன் வசத்தில் வைத்துக் கொள்வதற்கு பெண்ணுக்கு இஸ்லாத்தில் முழு உரிமை வழங்கப்பட்டுள்ளது. தன் கணவனுக்கு தன் பொருளிலிருந்து எதையாவது தர வேண்டும் என்று அவள் விரும்பினால் கணவனுக்கு கொடுப்பதில் தவறில்லை. நபி (ஸல்) அவர்களின் காலத்தில் பெண்கள் தங்கள் சொத்துக்களை தங்களுக்கு உரியதாகவே வைத்துக்கொண்டார்கள்.

நான் பள்ளிவாசல் இருந்தபோது நபி(ஸல்) அவாகள், "பெண்களே! உங்களின் ஆபரணங்களிருந்தேனும் தர்மம் செய்யுங்கள்" எனக் கூறினார்கள். நான் என் (கணவர்) அப்துல்லாஹ் (ரலி) அவர்களுக்கும் மற்றும் என் அரவணைப்பில் உள்ள அநாதைகளுக்கும் செலவழிப்பவளாக இருந்தேன். எனவே என் கணவரிடம், நான் உங்களுக்காகவும் எனது அரவணைப்பில் வளரும் அநாதைகளுக்காகவும் எனது பொருளைச் செலவழிப்பது ஸதகாவாகுமா என நபி(ஸல்) அவர்களிடம் கேட்டு வாருங்கள் எனக் கூறினேன். அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் 'அல்லாஹ்வின் தூதரிடம் நீயே கேள்' எனக் கூறிவிட்டார். எனவே நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். அவர்கள் வீட்டுவாயிலில் ஓர் அன்ஸாரிப் பெண் இருந்தார். அவரது நோக்கமும் எனது நோக்கமாகவே இருந்தது. அப்போது எங்களிடையே பிலால்(ரலி) வந்தார். அவரிடம் நான் எனது கணவருக்கும் எனது பராமரிப்பில் உள்ள அநாதைகளுக்கும் நான் செலவழிப்பது தர்மமாகுமா? என நபி(ஸல்) அவர்களிடம் கேளுங்கள்; நாங்கள் யார் என்பதைத் தெரிவிக்க வேண்டாம் எனக் கூறினோம். உடனே அவர் நபி (ஸல்) அவர்களிடம் சென்று கேட்டபோது நபி (ஸல்) அவர்கள், "அவ்விருவரும் யார்? எனக் கேட்டதற்கு அவர் 'ஸைனப்' எனக் கூறினார். நபி (ஸல்) அவர்கள் "எந்த ஸைனப்?" எனக் கேட்டதும் பிலால்(ரலி), 'அப்துல்லாஹ்வின் மனைவி' எனக் கூறினார். உடனே நபி(ஸல்) "ஆம்! ஸைனபுக்கு இரு நன்மைகளுண்டு. ஒன்று நெருங்கிய உறவினரை அரவணைத்ததற்குரியது; மற்றொன்று தர்மத்திற்குரியது" எனக் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு மஸ்ஊத் அவர்களின் மனைவி ஸைனப் (ரலி)**

**நூல் : புகாரி (1466)**

பெண்களுக்கு அவர்களின் மணக் கொடைகளை கட்டாயமாகக் கொடுத்து விடுங்கள்! அவர்களாக மனமுவந்து அதில் எதையேனும் விட்டுத் தந்தால் மனநிறைவுடனும், மகிழ்வுடனும் அதை உண்ணுங்கள்!

**அல்குர்ஆன் (4 : 4)**

## கருகமணி மெட்டி அணிவிக்க வேண்டுமா?

மனப்பெண் கருகமணியை கட்ட வேண்டும் என்ற வழிமுறையை நபி (ஸல்) அவர்கள் கற்றுத்தரவில்லை. இவ்வாறு செய்யுமாறு திருக்குர்ஆனும் கூறவில்லை. திருமணம் செய்வதாக இருந்தால் மனமகன் மனப்பெண்ணிற்கு மஹர் என்ற திருமணக்கொடையை கட்டாயம் தர வேண்டும். இரண்டு சாட்சிகள் அவசியம். பெண்ணின் பொருப்பாளரின் சம்மதம் அவசியம் வேண்டும். பெண்ணுடைய சம்மதமும் முக்கியம். இவைகள் தான் திருமணத்தின் நிபந்தனைகள்.

திருமணம் என்பது ஆண்கள் பெண்களிடத்தில் எடுக்கும் ஒரு வலிமையான ஒப்பந்தமாகும்.

உங்களிடம் கடுமையான உடன்படிக்கையை (பெண்களாகிய) அவர்கள் எடுத்துள்ளார்கள்.

**அல்குர்ஆன் (4 : 21)**

கருகமணியை அழகிற்காக பெண்கள் அணிவதில்லை. அது கழுத்தில் இருந்தால் தான் கணவன் உயிருடன் இருப்பான். அது அறுந்துவிட்டால் கணவனுக்கு ஆபத்து ஏதும் ஏற்பட்டுவிடும் என்ற மூடநம்பிக்கையில் அணியப்படுகிறது. எனவே தான் கருகமணி அறுந்துவிட்டால் கருகமணி அறுந்துவிட்டது என்று சொல்லாமல் கருகமணி பெருகிவிட்டது என்று கூறுவார்கள்.

இந்த மூடநம்பிக்கை தாலி என்ற பெயரில் மாற்றுமதத்தவர்களிடத்தில் தான் உள்ளது. மாற்றுமத்தவர்களைப் போன்று நடந்துகொள்வதை நபி (ஸல்) அவர்கள் தடைசெய்துள்ளார்கள்.

(மற்றக்) கூட்டத்தார்களைப் போன்று யார் நடக்கிறாரோ அவர் அவர்களைச் சார்ந்தவர் தான். (நம்மைச் சார்ந்தவர் இல்லை. )

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**

**நூல் : அபூதாவூத் (3512)**

கருகமணியைப் போன்றே மெட்டியும் மூடநம்பிக்கையின் காரணமாக அணியப்படுகிறது. இவற்றை அழகு என்ற காரணத்திற்காக பெண்கள் அணிந்தால் தவறாகாது. ஆனால் சடங்கு சம்பரதாயம் என்ற காரணத்திற்காக மக்களுக்கு மத்தியில் இவை அணியப்பட்டுவருவதால் இந்தப் பொருட்களை நாம் தவிர்த்துக்கொள்ள வேண்டும்.

**மனைவியின் பொறுப்பு என்ன?**

கணவனின் வீட்டைப் பாதுகாப்பதும் பிள்ளையை முறையாக வளர்ப்பதும் கணவனுக்குப் பிடித்தவாறு நடந்துகொள்வதும் மனைவியின் மீது கடமை.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளியே. நீங்கள் ஒவ்வொருவரும் அவரவர் பொறுப்பு குறித்து (மறுமையில்) விசாரிக்கப் படுவீர்கள்: (ஆட்சித்) தலைவரும் பொறுப்பாளரே. ஆண்மக(னான குடும்பத் தலைவ)னும் தன் மனைவி மக்களின் பொறுப்பாளன் ஆவான். பெண் (மனைவி), தன் கணவனின் வீட்டுக்கும் அவனுடைய குழந்தைகளுக்கும் பொறுப்பாளியாவாள். ஆக, நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளரே. நீங்கள் ஒவ்வொருவரும் தத்தமது பொறுப்பு குறித்து விசாரிக்கப்படுவீர்கள்.

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**

**நூல் : புகாரி (5200)**

கனவரது அனுமதியில்லாமல் (யாரையும்) அவரது இல்லத்திற்குள் மனைவி அனுமதிக்கலாகாது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (5195)**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒட்டகங்களில் பயணம் செய்த (அரபுப்) பெண்களிலேயே சிறந்தவர்கள், நல்ல குறைஷிக்குல பெண்களாவர். அவர்கள் குழந்தைகள் மீது அதிகப் பாசம் கொண்ட வர்கள்; தம் கணவனின் செல்வத்தை அதிகமாகப் பேணிக் காப்பவர்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (5082)**

**அலங்கரித்துக்கொண்டு கணவனுக்கு முன்னால் வர வேண்டும்**

கணவனுக்கு முன்னால் தன்னை அலங்கரித்துக் கொண்டு வர வேண்டும். கணவன் மனைவியை பார்க்கும் போது அவனுக்கு சந்தோஷமும் ஆசையும் ஏற்படவேண்டும்.

(தபூக் போரிலிருந்து திரும்பிக்கொண்டிருந்த என்னிடம்) நபி (ஸல்) அவர்கள், “நீ இரவில் (மதீனாவுக்குள்) நுழைந்த கையோடு உன் வீட்டாரிடம் சென்றுவிடாதே! (வெளியூர் சென்ற கணவரைப்) பிரிந்திருக்கும் பெண் சவரக்கத்தியைப் பயன்படுத்தி(த் தன்னை ஆயத்தப்படுத்தி)க்கொள்ளும் வரை, தலைவிரி கோலமாயிருக்கும் பெண் தலைவாரிக்கொள்ளும் வரை (பொறுமை யாயிரு!)” என்று கூறிவிட்டு, “புத்திசாலி த்தனமாக நடந்து(குழந்தையைத் தேடிக்)கொள்; புத்திசாலித்தனமாக நடந்துகொள்” என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)**

**நூல் : புகாரி (5245)**

ஒரு ஆண் சேமித்து வைக்கும் சொத்தில் சிறந்தது நல்ல பெண்ணாகும். கணவன் அவளை காணும் போது அவனுக்கு அவள் சந்தோஷத்தை ஏற்படுத்துவாள். கட்டளையிடும் போது அவனுக்குக் கட்டுப்படுவாள். கணவன் இல்லாத போது அவன் (சொத்தைப்) பாதுகாப்பாள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : அபூதாவுத் (1417)**

**கணவன் அழைக்கும் போது மறுக்கக்கூடாது**

ஒருவர் தம்முடைய மனைவியைப் படுக்கைக்கு அழைக்கும்போது அவள் வர மறுத்திட்டால், அவளைப் பொழுது விடியும் வரை வானவர்கள் சபித்துக்கொண்டேயிருக்கின்றனர்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (5193)**

கணவனுடைய ஆசையை நிவர்த்தி செய்வது மனைவியின் கடமை. நோன்பு வைத்திருக்கும் போது உடலுறவு கொள்ளக்கூடாது என்று இஸ்லாம் கூறுகிறது. எனவே உபரியான நோன்புகளை கணவனின் அனுமதி இல்லாமல் வைக்கக்கூடாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

கணவர் உள்ளூரில் இருக்கும் நிலையில் ஒரு பெண் அவரது அனுமதி இல்லாமல் (கூடுதல்) நோன்பு நோற்கக் கூடாது.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (5192)**

தன் தேவைக்காக கணவன் மனைவியை அழைத்தால் அவள் அடுப்பில் (வேலை பார்த்துக்கொண்டு) இருந்தாலும் அவனிடத்தில் செல்லட்டும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : தல்க் பின் அலீ (ரலி)**

**நூல் : திர்மிதி (1080)**

### அந்தரங்கத்தை வெளிப்படுத்தக்கூடாது

கணவன் மனைவிக்கு இடையில் நடக்கும் அந்தரங்கமான விஷயங்களை மற்றவர்களிடத்தில் சொல்வது தவறு. ஆனால் சில பெண்கள் தன் கணவனின் அந்தங்கமான விஷயங்களை மற்ற பெண்களிடத்தில் கூறுகிறார்கள். சில ஆண்களும் இவ்வாறு மற்ற ஆண்களிடத்தில் தன் மனைவியின் அந்தரங்கத்தை வெளிப்படுத்துகிறார்கள். மோசமான இந்தச் செயலை விட்டும் தவிர்ந்துகொள்ள வேண்டும்.

ஒரு மனிதன் தன் மனைவியுடன் இணைகிறான். அவளும் அவனுடன் இணைகிறாள். பிறகு அவளுடைய இரகசியத்தை பரப்பிவிடுகிறான். இவன் தான் மறுமை நாளில் அல்லாஹ்விடத்தில் மோசமான அந்தஸ்த்து உள்ளவன் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்ள்.

**அறிவிப்பவர் : அபூ சயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : முஸ்லிம் (2597)**

### மற்றப் பெண்களின் அந்தரங்கத்தைப் பற்றி தன் கணவனிடத்தில் கூறுவதும் தவறு.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒரு பெண் இன்னொரு பெண்ணை (வெற்று மேனியோடு) கட்டித் தழுவிட வேண்டாம். பின்னர் அவளைப் பற்றி இவள் தன் கணவனிடம்-அவளை அவன் நேரில் பார்ப்பதைப் போன்று வர்ணனை செய்ய வேண்டாம்.

**அறிவிப்பவர் : இப்னு மஸ்ஊத் (ரலி)**

**நூல் : புகாரி (5240)**

**கணவனுக்கு கட்டுப்பட்டு நடக்க வேண்டும்**

கணவன் மார்க்கத்திற்கு மாற்றம் இல்லாத எந்த ஒரு காரியத்தை கட்டளையிட்டாலும் அதற்கு மனைவி கண்டிப்பாக கட்டுப்பட வேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நபி (ஸல்) அவர்கள் "(நான் சூரிய கிரகணத் தொழுகையில் இருந்தபோது) எனக்கு நரகம் காட்டப்பட்டது. அதில் அதிகம்பேர் நிராகரிக்கும் பெண்களாகவே இருந்தனர்" என்று கூறினார்கள். அப்போது "இறைவனையா அவர்கள் நிராகரித்தார்கள்?" என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள், "கணவனை நிராகரிக்கிறார்கள்; (அதாவது அவன் செய்த) உதவிகளை நிராகரிக்கிறார்கள். அவர்களில் ஒருத்திக்குக் காலம் முழுவதும் நீ நன்மைகளைச் செய்து கொண்டேயிருந்து, பின்னர் (அவளுக்குப் பிடிக்காத) ஒன்றை உன்னிடம் அவள் கண்டு விட்டாளானால் "உன்னிடமிருந்து ஒரு போதும் நான் ஒரு நன்மையையும் கண்டதில்லை" என்று பேசிவிடுவாள்" என்றார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (29)**

ஹுஸைன் பின் மிஹ்ஸன் (ரலி) அவர்களின் தந்தையுடன் பிறந்த சகோதரி ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் ஒரு தேவைக்காக வந்திருந்தார். தேவையை முடித்துக்கொண்ட போது நபி (ஸல்) அவர்கள் அவரிடத்தில் உனக்கு கணவன் இருக்கிறாரா? என்று கேட்டார்கள். அதற்கு அவர் ஆம் என்றார். நபி (ஸல்) அவர்கள் அவரிடத்தில் நீ எவ்வாறு நடந்துகொள்கிறாய்? என்று கேட்டார்கள். அதற்கு அவர் என்னால் இயலாமல் போனாலேத் தவிர அவருக்கு நன்மை செய்வதில் நான் குறைவு வைக்கமாட்டேன் என்று கூறினார். நீ எவ்வாறு அவரிடத்தில் நடந்துகொள்கிறாய் என்பதை கவனித்துக்கொள். ஏனென்றால் அவர் தான் உனது சொர்க்கமாகும். உனது நரகுமுமாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஹுஸைன் பின் மிஹ்ஸன் (ரலி)**

**நூல் : அஹ்மத் (18233)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒருவர் இன்னொருவருக்கு சிரம்பணியுமாறு நான் கட்டளையிடுவதாக இருந்திருந்தால் மனைவி தன் கணவனுக்கு சிரம்பணியுமாறு கட்டளையிட்டிருப்பேன்.

**அறிவிப்பவர் : முஆத் பின் ஜபல் (ரலி)**

**நூல் : அஹ்மத் (20983)**

**கணவன் மார்க்கத்திற்கு மாற்றமாக சொன்னால்...**

மனைவி கணவனின் கட்டளைக்கு கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்று இஸ்லாம் கூறுகிறது. அதே நேரத்தில் கணவன் மார்க்கத்திற்கு மாற்றமாக கட்டளையிட்டால் அதற்குக் கட்டுப்படக்கூடாது. இதை பின் வரும் ஹதீஸ்களிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

அன்சாரிகளில் ஒரு பெண் தம்முடைய மகளுக்கு மணமுடித்து வைத்தார். அவரது மகளின் தலைமுடி உதிர்ந்துவிட்டது. அவள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து இது குறித்து தெரிவித்துவிட்டு, "என் கணவர், எனது தலையில் ஒட்டுமுடி வைத்துக்கொள்ளுமாறு பணிக்கிறார்" என்று கூறினாள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "வேண்டாம்! (ஒட்டுமுடி வைக்காதே!) ஒட்டுமுடி வைக்கும் பெண்கள் சபிக்கப்பட்டுள்ளனர்" என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (5205)**

அல்லாஹ்வுக்கு மாறுசெய்வதில் கீழ்படிதல் கிடையாது. கீழ்படிதல் என்பதெல்லாம் நன்மையில்தான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அலீ (ரலி)**

**நூல் : புகாரி (7257)**

**கணவனின் உறவினர்களுக்கு பணிவிடை செய்தல்**

கணவனுக்கும் அவனது உறவினர்களுக்கு பணிவிடை செய்வது பெண்கள் மீது கடமையில்லை என்று சில பெண்கள் நினைக்கிறார்கள். இதனால் கணவனின் உறவினர்களை இவர்கள் சரியாக கவனிப்பது கிடையாது. இது தவறாகும்.

ஒரு ஆண் ஒரு பெண்ணை பல நன்மைகளை எதிர்பார்த்து திருமணம் செய்கிறான். தனக்கும் தன் குடும்பத்தினருக்கும் அவள் பனிவிடை செய்யவேண்டும் என்பது அதில் ஒன்றாகும். முரண்டு பிடிக்காமல் முதியவர்களை மதித்து நடப்பதே இறைநம்பிக்கையுள்ள பெண்ணிற்கு அடையாளம்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடத்தில் ஜாபிரே உனக்கு மனைவி உண்டா? என்று கேட்டார்கள். நான் ஆம் என்றேன். ஏற்கனவே திருமணமானவளை மனந்தாயா அல்லது கண்ணிப்பெண்ணை மனந்தாயா? என்று கேட்டார்கள். அதற்கு நான் ஏற்கனவே திருமணம் செய்து கொண்டவளைத் தான் மனந்தேன் என்று கூறினேன். நீ சிறிய (இளம்) பெண்ணை திருமணம் செய்திருக்கக்கூடாதா? என்று கேட்டார்கள். நான் உங்களுடன் (போருக்கு சென்றிருந்த போது) என் தந்தை இன்னாளில் கொல்லப்பட்டுவிட்டார். அவர் (என் சகோதரிகளான) பல இளம் பெண்களை விட்டுச் சென்றுள்ளார். அவர்களைப் போன்ற ஒரு இளம் பெண்ணையே (என் மனைவியாக ஆக்கி) அவர்களுடன் சேர்த்து விடுவதை நான் விரும்பவில்லை. எனவே (என் சகோதரிகளான) அந்த இளம்பெண்களுக்கு பேண் பார்த்துவிடவும் அவர்களின் சட்டை கிழிந்துவிட்டால் அதைத் தைத்துக்கொடுக்கவும் (பக்குவம் பெற்ற) ஏற்கனவே திருமணமான பெண்ணை நான் திருமணம் செய்துகொண்டேன் என்று கூறினேன். நீ நினைப்பது சரிதான் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)**

**நூல் : அஹ்மத் (14332)**

அபூ உசைத் அஸ்ஸாஇதீ (ரலி) அவர்கள் (தமது) மணவிருந்தின்போது நபி (ஸல்) அவர்களையும் நபித்தோழர்களையும் அழைத்தார்கள். இவர்களுக்காக அபூ உசைத் (ரலி) அவர்களுடைய துணைவியார் (மணப் பெண்) உம்மு உசைத் (ரலி) அவர்களே உணவு தயாரித்துப் பரிமாறவும் செய்தார்கள். உம்மு உசைத் (ரலி) அவர்கள் (முந்தைய நாள்) இரவிலேயே கல் பாத்திரம் ஒன்றில் பேரீச்சங்கனிகள் சிலவற்றை ஊறப்போட்டு வைத்திருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் சாப்பிட்டு முடிந்தவுடன் அவர்களுக்காக உம்மு உசைத் (ரலி) அவர்கள் அந்தப் பேரீச்சங் கனிகளை(த் தமது கரத்தால்) பிழிந்து அன்பளிப்பாக ஊட்டினார்கள்.

**அறிவிப்பவர் : சஹ்ல் பின் சஃத் (ரலி)**

**நூல் : புகாரி (5182)**

**வெளியில் சென்றால் அனுமதி கேட்க வேண்டும்**

பெண்கள் வீட்டை விட்டு வெளியே செல்லும் போது கணவனிடம் அனுமதி கோர வேண்டும். பெண்கள் கணவனின் அனுமதி பெற்று வெளியில் செல்வது மார்க்கத்தில் உண்டு என்பதை பின்வரும் ஹதீஸிலிருந்து விளங்கிக்கொள்ளலாம்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : உங்கள் மனைவியர் பள்ளிவாசலுக்குச் செல்ல உங்களிடம் அனுமதி கேட்டால் அவர்களைத் தடுக்காதீர்கள்.

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**

**நூல் : புகாரி (5238)**

**கணவனுக்குத் தெரியாமல் அவனது பொருளை எடுக்கலாமா?**

கணவன் குடும்பத் தேவைகளுக்குப் போதுமான தொகையை கொடுக்காமல் கஞ்சத்தனம் செய்தால் அவனுக்குத் தெரியாமல் தேவையான அளவு அவனது பணத்தில் மனைவி எடுத்துக்கொள்வது குற்றமில்லை. அப்படி எடுக்கும் தொகை முக்கியமான குடும்பத் தேவைகளுக்காக மட்டுமே செலவிடப்பட வேண்டும்.

முஆவியா (ரலி) அவர்களின் தாயார் ஹிந்த் (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களிடம், (என் கணவர்) அபூசுஃப்யான் கஞ்சராக இருக்கிறார். அவரது பொருளை அவருக்குத் தெரியாமல் நான் எடுத்தால் என் மீது அது குற்றமாகுமா? எனக் கேட்டார்கள். அதற்கு, உனக்குப் போதுமானதை நியாயமான முறையில் நீயும் உன் பிள்ளைகளும் எடுத்துக் கொள்ளுங்கள்! என நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி) அவர்கள்**

**நூல் : புகாரி (2211)**

கணவனின் பொருளை வீண்விரயம் செய்யாமல் நல்ல வழியில் செலவழித்தால் மனைவிக்கு நன்மை உண்டு.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

ஒரு பெண் தனது வீட்டிலுள்ள உணவை –வீணாக்காமல் தர்மம் செய்தால் அவள் தர்மம் செய்த நன்மையைப் பெறுவாள். அதைச் சம்பாதித்த காரணத்தால் தர்மத்தின் நன்மை அவளது கணவனுக்கும் கிடைக்கும்;

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (22110)**

**குடும்பக்கட்டுப்பாடு செய்யலாமா?**

கருவில் குழந்தை உருவாகுவதை தடுப்பதற்கு நபி (ஸல்) அவர்களின் காலத்தில் அஸ்ல் என்ற ஒரு முறை இருந்தது. இல்லற வாழ்வின் போது ஆண் உச்சகட்ட நிலையை அடையும் போது தன் விந்தை மனைவியின் கற்ப அறைக்குள் செலுத்தாமல் வெளியே விட்டுவிடுவான். இம்முறைக்குத் தான் அஸ்ல் என்று சொல்லப்படுகிறது. இவ்வாறு செய்வதை நபி (ஸல்) அனுமதித்துள்ளார்கள் என்பதற்கு சான்றுகள் உள்ளது.

நபி (ஸல்) அவர்களது காலத்தில் குர்ஆன் அருளப்பட்டுக்கொண்டிருந்த நிலையில் நாங்கள் ‘அஸ்ல்’ (புணர்ச்சி இடை முறிப்பு) செய்துகொண்டிருந்தோம்.

**அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)**

**நூல் : புகாரி (5209)**

ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து (அல்லாஹ்வின் தூதரே) எனக்கு ஒரு அடிமைப் பெண் இருக்கிறாள்... அவள் எங்களுக்கு பணிவிடை செய்கிறாள். நான் அவளிடத்தில் உடலுறவு கொள்கிறேன். அவள் கற்பமாகிவிடுவாளோ என்று நான் அஞ்சுகிறேன் என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் நீ விரும்பினால் அஸ்ல் செய்துகொள். அவளுக்கென்று விதிக்கப்பட்டது அவளை விரைவில் வந்தடையும் என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (2606)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் காலத்தில் நாங்கள் அஸ்ல் (புணர்ச்சி இடைமறிப்பு) செய்துகொண்டிருந்தோம். இச்செய்தி நபி (ஸல்) அவர்களை எட்டியது. ஆனால் அவர்கள் எங்களைத் தடுக்கவில்லை.

**அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (2610)**

மேலுள்ள செய்திகளை கவனிக்கும் போது அஸ்ல் செய்வது தடைசெய்யப்பட்ட ஒன்றல்ல என்பதை விளங்கிக்கொள்ளலாம். என்றாலும் நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு செய்வது சிறந்தது என்றோ நன்மையான காரியம் என்றோ கூறவில்லை. மாறாக இதை தவிர்த்துக்கொள்வது நல்லது என்ற அளவில் தான் கூறியுள்ளார்கள். பின்வரும் செய்திகளை கவனிக்கும் போது இந்த முடிவுக்கு வரலாம்.

நாங்கள் அஸ்ல் செய்ய விரும்பினோம். எனவே அது பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டோம். அதற்கு அவர்கள் அதை நீங்கள் செய்யாமல் இருந்தால் தவறேதுமில்லையே. மறுமை நாள் வரை உருவாக வேண்டிய எந்த உயிரும் கட்டாயம் உருவாகியேத் தீரும் என்று பதிலளித்தார்கள்.

**அறிவிப்பவர் : அபூ சயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : புகாரி (2542)**

தற்காலிகமாக குழந்தை உருவாவதை தடுத்துக்கொள்வதற்கான வழி தான் அஸ்ல் என்பது. அவ்வாறு செய்வதை சிறந்தது கிடையாது என்று நபியவர்கள் கருதியிருக்கும் போது நிரந்தரமாக குழந்தை உருவாகாத வாறு குடும்பக்கட்டுப்பாடு செய்வது முற்றிலும் தவறாகும். தற்காலிக கட்டுப்பாடான அஸ்ல் செய்வதற்கு நபி (ஸல்) அவர்கள் அனுமதியளித்துள்ளதால் ஆணுறை காப்பர்டி போன்ற நவீன சாதனங்களை பயன்படுத்தி தற்காலிகமாக குடும்பகட்டுப்பாடு செய்வதற்கு மாத்திரம் அனுமதியுள்ளது.

குழந்தை பாக்கியம் என்பது அல்லாஹ் கொடுத்த ஒரு மாபெரும் பாக்கியம். போதுமான அளவு குழந்தைகளை பெற்றெடுத்தப் பின் நிரந்தர குடும்பக்கட்டுப்பாட்டை செய்யலாம் என்று பலர் நினைக்கிறார்கள். நிரந்தர குடும்பக்கட்டுப்பாட்டை செய்த பின் பெற்றெடுத்தக் குழந்தைகள் விபத்தில் சிக்கி இறந்துவிட்டால் மீண்டும் இவர்கள் குழந்தை பாக்கியத்தை எப்படி பெறமுடியும்?. இதை சிந்தித்துப் பார்த்தாலே யாரும் நிரந்தர குடும்பக்கட்டுப்பாட்டை செய்யமாட்டார்கள்.

### செய்ற்கை முறையில் கருத்தரிப்பது கூடுமா?

நவீன கண்டுபிடிப்புகளின் வளர்ச்சியால் ஏற்பட்ட மாற்றங்களில் செயற்கை முறையில் கருத்தரித்தல் என்பது ஒன்றாகும். இது இரண்டு முறையில் செய்யப்படுகிறது. கணவனின் விந்தை மனைவியின் கர்ப்ப அறைக்குள் கருவிகள் மூலம் செலுத்தி கருத்தரிக்கச் செய்யுதல். இவ்வாறு செய்வதில் தவறில்லை. ஏனென்றால் மனைவி என்பவள் கணவனின் விளைநிலம் என்று அல்லாஹ் கூறுகிறான். தன்னுடைய நிலத்தில் தன் விதையை விதைப்பதற்கு கணவனுக்கு முழு அனுமதியுள்ளது.

உங்கள் மனைவியர் உங்களின் விளை நிலங்கள். உங்கள் விளை நிலங் களுக்கு விரும்பியவாறு செல்லுங்கள்!

**அல்குர்ஆன் (2 : 223)**

ஆனால் கணவன் அல்லாத யாரோ ஒருவரது விந்தனுவை பெண்ணின் கருவறைக்குள் செலுத்தி கருத்தரிக்கச் செய்வதை இஸ்லாம் அனுமதிக்கவில்லை. ஏனென்றால் தனக்கு உரிமையில்லாத நிலத்தில் விதையைத் தூவி பயிரிடுவதை யாரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். அதுபோல் தனக்கு உரிமையில்லாதவளிடம் தன் விந்தை செலுத்தி குழந்தையை உருவாக்குவதை இஸ்லாம் ஒத்துக்கொள்ளவில்லை.

குழந்தைகளை பெற்றெடுப்பதால் சிரமங்களை அனுபவிக்க வேண்டியுள்ளது என்பதாலும் அழகு குறைந்தவிடுகிறது என்பதாலும் சில பெண்கள் குழந்தையை பெற்றெடுப்பதற்கு வாடகைப் பெண்களை அமர்த்துகிறார்கள். தங்கள் கணவனின் விந்தணுவை இப்பெண்களின் கருவரைக்குள் செலுத்தி கருத்தரிக்கச் செய்கிறார்கள். இதுவும் செய்யக்கூடாத மானங்கெட்ட செயலாகும். குழந்தையை பெற்றெடுத்தவள் தான் குழந்தைக்குத் தாயாக முடியும் என்ற சாதாரண அறிவு இருந்தால் இதுபோன்ற இழிவுச் செயலை செய்யமாட்டார்கள்.

**விவாகரத்து (தலாக்)**

மனைவியை விட்டுப் பிரிவதற்கு விரும்பும் கணவன் உன்னை விவாகரத்துச் செய்கிறேன் என்று மனைவியிடம் கூறுவதன் மூலம் விவாகரத்து ஏற்பட்டுவிடும். இதற்கு அரபுமொழியில் தலாக் என்று சொல்லப்படும். இவ்வாறு விவாகரத்துச் செய்திட இஸ்லாத்தில் மூன்று வாய்ப்புகள் வழங்கப்பட்டுள்ளது.

ஒரு முறை மனைவியை விவாகரத்துச் செய்தவுடன அடியோடு திருமண உறவு முடிந்துவிடும் என்று கருதிவிடக்கூடாது. மாறாக முதல் தடவை விவாகரத்துச் செய்த பின் மனைவிக்கு மூன்று மாதவிடாய் ஏற்படுவதற்குள் புதிய திருமணம் செய்யாமலேயே மனைவியுடன் சேர்ந்து கொள்ளலாம். மனைவி கர்பிணியாக இருந்தால் அவள் பிரசவிப்பதற்குள் சேர்ந்துகொள்ளலாம்.

இந்தக் காலக்கெடுவுக்குள் மனைவியுடன் கணவன் சேரவில்லையானால் அவர்களுக்கிடையே திருமண உறவு நீங்கிவிடும். ஆயினும் இருவரும் மீண்டும் சேர்ந்து வாழ விரும்பினால் மீண்டும் அவர்கள் திருமணம் செய்து கொண்டு சேர்ந்து வாழலாம். இதற்கு எந்தத் தடையும் மார்க்கத்தில் இல்லை.

இதன் பிறகு அவர்களுக்கிடையே மீண்டும் சேர்ந்து வாழ முடியாத நிலை ஏற்பட்டால் முன்பு கூறிய எல்லா வழிமுறைகளையும் கையாண்ட பின் இறுதியாக மீண்டும் விவாகரத்துச் செய்யலாம்.

முன்பு குறிப்பிட்டது போல் மூன்று மாதவிடாய் காலத்திற்குள் மனைவியுடன் மீண்டும் சேர்ந்துகொள்ளலாம். இந்தக் காலம் கடந்து முடிந்த பிறகு இருவரும் சேர்ந்து வாழ விரும்பினால் மீண்டும் இவர்கள் புதிய திருமணத்தை செய்துகொண்டு சேர்ந்து வாழலாம்.

மூன்றாம் முறை சேர்ந்து வாழும் போது அவர்களுக்கிடையே நல்லிணக்கம் ஏற்படாமல் போனால் மூன்றாவது தடவையாக விவாகரத்துச் செய்யலாம். ஆனால் இது தான் இறுதி வாய்ப்பாகும். மூன்றாவது முறை விவாகரத்துச் செய்துவிட்டால் மனைவியுடன் சேர்ந்து வாழ்வதற்கான வாசல் அடைக்கப்பட்டுவிடுகிறது.

என்றாலும் விவாகரத்துச் செய்யப்பட்டவள் வேறொரு கணவனை மணந்து அவனும் அவளை விவாகரத்துச் செய்தால் இந்த நேரத்தில் மட்டும் முதல் கணவன் அவளை மறுபடியும் திருமணம் செய்து கொள்ளலாம்.

இஸ்லாம் வழங்கியுள்ள இந்தச் சட்டத்தை புரிந்து கொள்ளாத சில முஸ்லிம்கள் தங்கள் இல்லற வாழ்வைப் பாழாக்கி வருகிறார்கள். ஒரே நேரத்தில் மூன்று தலாக் என்றோ முத்தலாக் என்றோ கூறி மனைவியை விவாகரத்துச் செய்கின்றனர். அதன் பிறகு சேர்ந்து வாழ வழியில்லை என்றும் நினைக்கின்றனர்.

இது முற்றிலும் தவறாகும். ஒரு நேரத்தில் மூன்று தலாக் என்று கூறினாலோ அல்லது மூன்னூறு தலாக் என்று கூறினாலும் ஒரு விவாகரத்துத் தான் நிகழ்ந்துள்ளது. ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் காலத்தில் ஒரு நேரத்தில் மூன்று தலாக் சொல்வது ஒரு தலாக்காகவே கருதப்பட்டது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் காலத்திலும் அபூபக்ர் (ரலி) அவர்களின் காலத்திலும் உமர் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் முதல் இரண்டு வருடத்திலும் மூன்று முறை தலாக் சொல்வது ஒரு தலாக்காகவே (கருதப்பட்டது.)

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (2689)**

ஒரே நேரத்தில் மூன்று தலாக் என்று கூறி அது மூன்று தலாக்காகவே கருதப்படுதல் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னர் ஏற்பட்டது தவறான நடைமுறையாகும்.

### இரண்டு சாட்சிகள்

அவர்கள் தமக்குரிய தவணையை அடையும் போது அவர்களை நல்ல முறையில் தடுத்து வைத்துக் கொள்ளுங்கள்! அல்லது நல்ல முறையில் அவர்களைப் பிரிந்து விடுங்கள்! உங்களில் நேர்மையான இருவரை சாட்சிகளாக ஏற்படுத்திக் கொள்ளுங்கள்! அல்லாஹ்வுக்காக சாட்சியத்தை நிலை நாட்டுங்கள்!

**அல்குர்ஆன் (65 : 2)**

இவ்வசனத்தில் விவாகரத்துச் செய்வதற்கான மற்றொரு நிபந்தனையை அல்லாஹ் கூறுகிறான். அதாவது விவாகரத்துச் செய்யும் போது இரண்டு சாட்சிகள் இருக்க வேண்டும் என்பதே அந்த நிபந்தனை.

### தொலைபேசியில் விவாகரத்துச் செய்யலாமா?

தொலைபேசியில் விவாகரத்து தபால் விவாகரத்து என்றெல்லாம் முஸ்லிம் சமுதாயத்தில் சிலர் விவாகரத்துச் செய்வதையும் அதை மார்க்க அறிஞர்கள் சரி காண்பதையும் நாம் காண்கிறோம்.

தபாலில் எழுதுவதற்கும் தொலைபேசியில் பேசுவதற்கும் இரண்டு சாட்சிகள் இருந்தால் போதும் என்று இதை சிலர் விளங்கிக்கொள்கின்றனர்.

விவாகரத்துச் செய்பவனையும் செய்யப்பட்டவளையும் இருவருக்கிடையே விவாகரத்து நடப்பதையும் கண்ணால் காண்பவர் தான் அதற்குரிய சாட்சியாக இருக்க முடியும். எனவே எதிர் தரப்பில் உள்ள பெண் யார் என்று தெரியாமல் அவள் இவனுக்கு மனைவி தான் என்பதையும் அறியாமல் தன் மனைவியுடன் தான் தொலைபேசியில் பேசுகிறான் என்பதையும் அறியாமல் எவரும் சாட்சியாக முடியாது.

எனவே இந்த விதியை கவனத்தில் வைத்துக் கொண்டால் அவசரத்தில் செய்யப்படும் விவாகரத்துகள் தவிர்க்கப்படும்.

**விவாகரத்துத் தொடர்பான குர்ஆன் வசனங்கள்**

விவாக ரத்துச் செய்யப்பட்ட பெண்கள் மூன்று மாதவிடாய்க் காலம் (மறுமணம் செய்யாமல்) காத்திருக்க வேண்டும். அல்லாஹ்வையும், இறுதி நாளையும் அவர்கள் நம்பி இருந்தால் தமது கருவறைகளில் அல்லாஹ் படைத்திருப்பதை மறைப்பதற்கு அவர்களுக்கு அனுமதி இல்லை. இருவரும் நல்லிணக்கத்தை விரும்பினால் அவர்களின் கணவர்கள் அவர்களைத் திரும்பச் சேர்த்துக் கொள்ளும் உரிமை படைத்தவர்கள். பெண்களுக்குக் கடமைகள் இருப்பது போல அவர்களுக்கு உரிமைகளும் சிறந்த முறையில் உள்ளன. அவர்களை விட ஆண்களுக்கு ஓர் உயர்வு உண்டு. அல்லாஹ் மிகைத்தவன்; ஞானமிக்கவன்.

**அல்குர்ஆன் (2 : 228)**

இவ்வாறு விவாகரத்துச் செய்தல் இரண்டு தடவைகளே. (இதன் பிறகு) நல்ல முறையில் சேர்ந்து வாழலாம். அல்லது அழகான முறையில் விட்டு விடலாம். மனைவியருக்கு நீங்கள் கொடுத்தவற்றிலிருந்து எந்த ஒன்றையும் திரும்பப் பெறுவதற்கு அனுமதி இல்லை. அவ்விருவரும் (சேர்ந்து வாழும் போது) அல்லாஹ்வின் வரம்புகளை நிலை நாட்ட மாட்டார்கள் என்று அஞ்சினால் தவிர. அவ்விருவரும் (சேர்ந்து வாழும் போது) அல்லாஹ்வின் வரம்புகளை நிலை நாட்ட மாட்டார்கள் என்று நீங்கள் அஞ்சினால் அவள் எதையேனும் ஈடாகக் கொடுத்து பிரிந்து விடுவது இருவர் மீதும் குற்றமில்லை. இவை அல்லாஹ்வின் வரம்புகள். எனவே அவற்றை மீறாதீர்கள்! அல்லாஹ்வின் வரம்புகளை மீறுவோரே அநீதி இழைத்தவர்கள்.

**அல்குர்ஆன் (2 : 229)**

(இரண்டு தடவை விவாகரத்துச் செய்து சேர்ந்து கொண்ட பின் மூன்றாவது தடவையாக) அவளை அவன் விவாக ரத்துச் செய்து விட்டால் அவள் வேறு கணவனை மணம் செய்யாத வரை அவனுக்கு அனுமதிக்கப்பட்டவளாக ஆக மாட்டாள். (இரண்டாம் கணவனாகிய) அவனும் அவளை விவாக ரத்துச் செய்து, (மீண்டும் முதல் கணவனும் அவளும் ஆகிய) இருவரும் அல்லாஹ்வின் வரம்புகளை நிலை நாட்ட முடியும் எனக் கருதினால் (திருமணத்தின் மூலம்) சேர்ந்து கொள்வது குற்றமில்லை. இவை அல்லாஹ்வின் வரம்புகள். அறிகிற சமுதாயத்திற்கு அவன் இதைத் தெளிவுபடுத்துகிறான்.

**அல்குர்ஆன் (2 : 230)**

பெண்களை நீங்கள் விவாக ரத்துச் செய்தால் அவர்கள் தமக்குரிய காலக்கெடுவின் இறுதியை அடைவதற்குள் நல்ல முறையில் அவர்களைச் சேர்த்துக் கொள்ளுங்கள்! அல்லது நல்ல முறையில் விட்டு விடுங்கள்! அவர்களைத் துன்புறுத்தி வரம்பு மீறுவதற்காகச் சேர்த்துக் கொள்ளாதீர்கள்! இவ்வாறு செய்பவர் தமக்கே அநீதி இழைத்துக் கொண்டார். அல்லாஹ்வின் வசனங்களைக் கேலிக்குரியதாக்கி விடாதீர்கள்! உங்களுக்கு அல்லாஹ் செய்துள்ள அருட்கொடையையும், வேதம் மற்றும் ஞானத்தை வழங்கியதையும் எண்ணிப் பாருங்கள்! இது குறித்து அவன் உங்களுக்கு அறிவுரை கூறுகிறான். அல்லாஹ்வை அஞ்சுங்கள்! 'அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் அறிந்தவன்' என்பதை அறிந்து கொள்ளுங்கள்! **அல்குர்ஆன் (2 : 231)**

பெண்களை விவாக ரத்துச் செய்த பின் அவர்கள் தமது காலக் கெடுவை நிறைவு செய்து விட்டால் அவர்கள் (தமக்குப் பிடித்த) கணவர்களை விருப்பப்பட்டு நல்ல முறையில் மணந்து கொள்வதைத் தடுக்காதீர்கள்! உங்களில் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்புவோருக்கு இவ்வாறு அறிவுரை கூறப்படுகிறது. இதுவே உங்களுக்குத் தூய்மையானது; பரிசுத்தமானது. அல்லாஹ்வே அறிவான். நீங்கள் அறிய மாட்டீர்கள்.

**அல்குர்ஆன் (2 : 232)**

**பெண்களின் விவாகரத்து உரிமை**

விவாகரத்துச் செய்யும் உரிமை ஆண்களுக்கு இருப்பதைப் போன்று பெண்களுக்கும் இஸ்லாத்தில் உண்டு.

ஸாபித் பின் கைஸ் பின் ஷம்மாஸ் (ரலி) அவர்களின் துணைவியார் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! (என் கணவர்) ஸாபித் பின் கைஸின் குணத்தையோ, மார்க்கப் பற்றையோ நான் குறை கூறவில்லை. ஆனால், நான் இஸ்லாத்தில் இருந்துகொண்டே இறை நிராகரிப்புக்குரிய செயலைச் செய்து விடுவேனோ என்று அஞ்சுகிறேன்" என்று கூறினார். அப்போது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "ஸாபித் உனக்கு (மணக் கொடையாக) அளித்த தோட்டத்தை நீ அவருக்கே திருப்பித் தந்துவிடுகிறாயா?" என்று கேட்டார்கள். அவர், "ஆம் (தந்து விடுகிறேன்)" என்று கூறினார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஸாபித் அவர்களிடம்), "தோட்டத்தை ஏற்றுக்கொண்டு, அவளை ஒரு முறை தலாக் சொல்லிவிடுங்கள்!" என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (5273)**

மேற்கண்ட செய்தியிலிருந்து நபி (ஸல்) அவர்களின் காலத்திலிருந்த நடைமுறையை அறியலாம். ஒரு பெண்ணுக்கு கணவனைப் பிடிக்காவிட்டால் அவள் சமுதாயத் தலைவரிடம் முறையிட வேண்டும். அந்தத் தலைவர் அவள் கணவனிடமிருந்து பெற்றிருந்த மஹர் தொகையை திரும்பக் கொடுக்குமாறும் அந்த மஹர்

தொகையை கணவன் பெற்றுக் கொண்டு மனைவியை விட்டு விலகுமாறு கணவனுக்கு கட்டளையிட வேண்டும். திருமணத்தையும் இரத்துச் செய்ய வேண்டும் என்பதை இந்தச் செய்தியிலிருந்து அறியலாம்.

பெண்கள் தாமாகவே விவாக ஒப்பந்தத்தை முறித்துவிடாமல் தலைவர் முன்னிலையில் முறையிடுவது அவசியமாகின்றது. ஏனெனில் பெண்கள் கணவனிடமிருந்து உரறிய மஹர் தொகை பெற்றிருப்பதாலும் அதை திரும்பவும் கணவனிடம் ஒப்படைக்க வேண்டும் என்பதாலும் இந்த நிபந்தனை ஏற்படுத்தப்பட்டுள்ளது.

மேலும் விவாகரத்துப் பெற்றதற்குப் பின்னால் பெண்களே அதிக சிரமத்திற்கு ஆளாக நேர்வதால் இத்தகைய முடிவுக்கு அவர்கள் அவசரப்பட்டு வந்துவிடக் கூடாது என்பதற்காகவும் இந்த ஏற்பாடு அவசியமாகின்றது. சமுதாயத் தலைவர் அவளுக்கு நற் போதனை செய்ய வழி ஏற்படுகின்றது. எனவே சமுதாயத் தலைவரிடம் தெரிவித்து விட்டு அவர் மூலமாகப் பிரிந்து கொள்வதே அவளுக்குச் சிறந்ததாகும்.

பிடிக்காத கணவனுடன் சேர்ந்து வாழுமாறு பெண்ணை கட்டாயப்படுத்த யாருக்கும் உரிமை இல்லை. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூட பரீரா என்ற பெண்ணிற்கு பிரிந்த தன் கணவனுடன் சேர்ந்து வாழுமாறு பரிந்துரை செய்தார்களேத் தவிர நிர்பந்திக்கவில்லை.

பரீராவின் கணவர் அடிமையாக இருந்தார். அவருக்கு முஃகீஸ் என்று (பெயர்) சொல்லப்படும். அவர் (பரீரா தம்மைப் பிரிந்துவிட நினைக்கிறார் என்பதை அறிந்த போது) தமது தாடியில் கண்ணீர் வழியும் அளவிற்கு அழுத வண்ணம் பரீராவிற்குப் பின்னால் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்ததை இப்போதும் நான் காண்பதைப் போன்றுள்ளது. அப்போது நபி (ஸல்) அவர்கள் அப்பாஸ் (ரலி) அவர்களிடம் "அப்பாஸ் அவர்களே! முஃகீஸ் பரீராவின் மீது வைத்துள்ள நேசத்தையும், பரீரா முஃகீஸின் மீது கொண்டுள்ள கோபத்தையும் கண்டு நீங்கள் வியப்படையவில்லையா?" என்று கேட்டார்கள். (முஃகீஸிடமிருந்து பரீரா பிரிந்துவிட்டபோது) நபி (ஸல்) அவர்கள் "முஃகீஸிடம் நீ திரும்பிச் செல்லக் கூடாதா?" என்று (பரீராவிடம்) கேட்டார்கள். அதற்கு பரீரா "அல்லாஹ்வின் தூதரே! எனக்குத் தாங்கள் கட்டளையிடுகின்றீர்களா?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள் "(இல்லை.) நான் பரிந்துரைக்கவே செய்கின்றேன்" என்றார்கள். அப்போது பரீரா, "(அப்படியானால்,) அவர் எனக்குத் தேவையில்லை" என்று கூறிவிட்டார்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (5283)**

**குலஃ உடைய சட்டங்களின் சுருக்கம்**

ஒரு பெண்ணிற்கு தன் கணவனைப் பிடிக்கவில்லையானால் அவள் அந்தப் பகுதியின் தலைவரிடம் முறையிட வேண்டும்.

அவள் திருமணத்தின் போது கணவனிடமிருந்து மஹராக எதை வாங்கினாலோ அதைக் கணவனிடமே திருப்பி ஒப்படைக்குமாறு தலைவர் அவளுக்கு கட்டளையிட வேண்டும்.

அந்த மஹரைப் பெற்றுக் கொண்டு உடனே அவளை விட்டுப் பிரிந்துவிடுமாறு அந்தக் கணவருக்கு தலைவர் கட்டளையிட வேண்டும். அந்தக் கட்டளைக்கு அவன் கட்டுப்படாவிட்டாலும் கூட தலைவர் அந்தத் திருமண உறவை இரத்துச் செய்ய வேண்டும்.

கணவனைப் பிடிக்காத மனைவி அதற்குரிய காரணத்தைத் தெளிவாகக் கூற வேண்டியதில்லை.

கணவன் தலாக் கூறும் போது மூன்று மாதவிடாய் காலத்திற்குள் அவளை திரும்பவும் அழைத்துக் கொள்ளும் உரிமை அவனுக்கு இருப்பது போல் மனைவி குலாஃ செய்து பிரியும் போது அழைத்துக் கொள்ள முடியாது.

தலாக் விடப்படும் போது மூன்று மாதவிடாய்க் காலம் வரை அவள் மறுமணம் செய்யாமல் இருக்க வேண்டும். ஆனால் குலஃ அடிப்படையில் பிரியும் போது ஒரே ஒரு மாதவிடாய்க் காலம் வரை மறுமணம் செய்யக் கூடாது. அதன் பிறகு தான் நாடுபவரை அவள் திருமணம் செய்துகொள்ளலாம்.

நான் என் கணவரிடமிருந்து விவாகரத்தைப் பெற்றுக் கொண்டு உஸ்மான் (ரலி) அவர்களிடம் வந்தேன். எவ்வளவு நாள் நான் இத்தா இருக்க வேண்டும் என்று அவர்களிடத்தில் கேட்டேன். அதற்கு அவர்கள் நீ ஒரு மாதவிடாய்க் காலத்தை அடையும் வரை பொறுத்திரு. இவ்விஷயத்தில் மகாலிய்யா குலத்தைச் சார்ந்த மர்யம் என்வருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வழங்கிய தீர்ப்பையே கடைபிடிக்கிறேன். அப்பெண் ஸாபித் பின் கைஸ் பின் ஷம்மாஸ் என்பவருக்கு மனைவியாக இருந்தார். பின்பு அவரிடமிருந்து மணவிலக்குப் பெற்றுக்கொண்டார் என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ருபைஃ பின்த் முஅவ்வித் (ரலி)**

**நூல் : நஸயீ (3441)**

## இத்தா

சில முஸ்லிம்கள் கணவன் இறந்துவிடும் போது மனைவியாக இருந்தவளை இத்தா என்ற பெயரில் நான்கு மாதம் பத்து நாட்கள் இருட்டறையில் அடைத்து கொடுமைப்படுத்துகின்றனர். மேலும் வெள்ளைநிற ஆடையை அணிவிக்கின்றனர். நற்காரியங்களில் அவர்கள் வருவது அபசகுணம் என்று கூறி ஒதுக்கி வைக்கின்றனர். இது குற்றமாகும். இத்தா பற்றிய சரியான விளக்கம் இல்லாததே இதற்குக் காரணம். எனவே அது பற்றிய விபரங்களை காண்போம்.

கணவனை இழந்த பெண்களும், கணவனால் விவாகரத்து செய்யப்பட்ட பெண்களும் குறிப்பிட்ட காலம் வரை மறுமணம் செய்வதைத் தள்ளிப் போட வேண்டும். மேலும் திருமண ஆசையைத் தூண்டக்கூடிய அலங்காரங்களை செய்யக்கூடாது. இந்த கால கட்டமே இத்தா எனப்படும்.

கணவனை இழந்த பெண் நான்கு மாதங்களும் பத்து நாட்களும் கழிப்பதற்குள் மறுமணம் செய்யக் கூடாது. விவாகரத்து செய்யப்பட்ட பெண்கள் மூன்று மாத விடாய் காலம் முழுமை அடைவதற்குள் மறுமணம்

செய்யக் கூடாது. கணவனை இழந்த பெண்கள் கர்ப்பமாக இருந்தால் பிரசவிக்கும் வரையிலும், அவர்கள் மறுமணம் செய்யக்கூடாது.

உங்களில் எவரேனும் மனைவியரை விட்டு மரணித்தால் நான்கு மாதங்களும் பத்து நாட்களும் (மறுமணம் செய்யாமல்) அப்பெண்கள் காத்திருக்க வேண்டும். அந்தக் காலக்கெடுவை நிறைவு செய்து விட்டால் அவர்கள் தம் விஷயமாக நல்ல முறையில் முடிவு செய்வதில் உங்கள் மீது எந்தக் குற்றமும் இல்லை. அல்லாஹ் நீங்கள் செய்வதை நன்கறிந்தவன்.

**அல்குர்ஆன் (2 : 234)**

விவாக ரத்துச் செய்யப்பட்ட பெண்கள் மூன்று மாதவிடாய்க் காலம் (மறுமணம் செய்யாமல்) காத்திருக்க வேண்டும். அல்லாஹ்வையும், இறுதி நாளையும் அவர்கள் நம்பி இருந்தால் தமது கருவறைகளில் அல்லாஹ் படைத்திருப்பதை மறைப்பதற்கு அவர்களுக்கு அனுமதி இல்லை.

**அல்குர்ஆன் (2 : 228)**

கர்ப்பிணிகளின் காலக்கெடு அவர்கள் பிரசவிப்பதாகும்.

**அல்குர்ஆன் (65 : 4)**

கணவனை இழந்த பெண்கள் நான்கு மாதம் பத்து நாட்கள் மறுமணம் செய்யாமல் காத்திருக்க வேண்டும் என்று 2:234 வசனத்தில் கூறப்பட்டுள்ளது. அந்தக் காலக்கெடுவிலிருந்து கர்ப்பினிப் பெண்கள் விதிவிலக்குப் பெறுகிறார்கள் என்பதை மேலுள்ள வசனத்திலிருந்து அறியலாம்.

கணவன் மரணிக்கும் போது மனைவி நிறைமாத கர்ப்பினியாக இருந்து, கணவன் இறந்த அன்றே பிரசவித்து விட்டால் அவளுக்கு இத்தா ஏதும் கிடையாது. கணவன் மரணிக்கும் போது முதல் மாதக் கருவை மனைவி சுமந்திருந்தால் அவள் பிரசவிக்கும் வரை மறுமணம் செய்யக் கூடாது. இதற்கு எட்டு அல்லது ஒன்பது மாதங்கள் ஆகலாம்.

**அலங்கரித்தல் கூடாது**

இத்தா இருக்கும் பெண்கள் நறுமணம் பூசுதல் கண்களுக்கு சுர்மா இடுதல் கலர் ஆடைகளை அணியுதல் மருதாணி பூசுதல் போன்ற அலங்காரங்களை தவிர்த்துக்கொள்ள வேண்டும். தலைக்கு எண்ணெய் தேய்த்து உடலையும் கூந்தலையும் தூய்மையாக வைத்துக்கொள்வதில் தவறில்லை. கூடுதலான அலங்காரங்களையும் ஒப்பனைப் பொருட்களையும் அதாவது மேக்கப் பொருட்களை தவிர்த்துக்கொள்ள வேண்டும்.

இறந்து விட்டவர்களுக்காக மூன்று நாட்களுக்கு மேல் (அலங்காரம், நறுமணம் உள்ளிட்டவற்றைக் கைவிட்டு) துக்கம் கடைப்பிடிக்கக் கூடாதென நாங்கள் (நபியவர்களால்) தடைவிதிக்கப்பட்டோம். ஆனால் (கணவருக்காக அவர் இறந்தபின் அவருடைய) மனைவி நான்கு மாதம் பத்து நாட்கள் (துக்கம்

கடைபிடிப்பதைத்) தவிர! (அதாவது இந்த நாட்களில்) நாங்கள் (கண்ணில்) அஞ்சனம் தீட்டவோ, நறுமணம் பூசவோ சாயமிட்ட ஆடைகளை அணிவதோ கூடாது. ஆனால் நெய்வதற்கு முன் நூலில் சாயமிடப்பட்ட (அஸ்ப் எனும்) ஆடையைத் தவிர! (அதை அணிந்துகொள்ளலாம்.)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : கணவனை இழந்தப் பெண் குங்குமப்பூச் சாயம் பூசப்பட்ட ஆடை மற்றும் சிவப்பு நிற ஆடையை அணியக்கூடாது. இன்னும் அவள் மருதாணி பூசக்கூடாது. அஞ்சனம் (அதாவது சுர்மா) இடுவதும் கூடாது.

**அறிவிப்பவர் : உம்மு சலமா (ரலி) நூல் : நஸயீ (3479)**

## இத்தாவின் போது வெளியில் செல்லலாமா?

இத்தா இருக்கும் பெண்கள் வெளியில் செல்லக்கூடாது என்று பலர் நினைக்கிறார்கள். இக்காலக்கட்டத்தில் அவர்களை இருட்டறையில் அடைத்துக் கொடுமைப் படுத்துகிறார்கள். இஸ்லாம் இவ்வாறு செய்ய வேண்டும் என்று கூறவில்லை. மற்றப் பெண்களைப் போல் இத்தாவில் இருக்கும் பெண்கள் தாராளமாக வெளியில் சென்று தங்கள் தேவைகளை நிறைவேற்றிக்கொள்ளலாம். ஆனால் வீணாக ஊர் சுத்துவது கூடாது.

என் தாயின் சகோதரி மணவிலக்குச் செய்யப்பட்டார். அவர் ('இத்தா'வில் இருந்தபோது) தமது பேரீச்ச மரத்தின் கனிகளைப் பறிக்க விரும்பினார். (இத்தருணத்தில்) நீ வெளியே செல்லக் கூடாதென அவரை ஒருவர் கண்டித்தார். ஆகவே, என் தாயின் சகோதரி, நபி (ஸல்) அவர்களிடம் வந்(து, அது குறித்துத் தெரிவித்)தபோது நபி (ஸல்) அவர்கள், "ஆம்; நீ (சென்று) உமது பேரீச்ச மரத்தின் கனிகளைப் பறித்துக்கொள். ஏனெனில், (அதில் கிடைக்கும் வருமானத்தில்) நீ தர்மம் செய்யக் கூடும்; அல்லது ஏதேனும் நல்லறம் புரியக் கூடும்" என்றார்கள்.

**அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (2972)**

## குழந்தை யாருடைய பொறுப்பில் வளரும்?

கணவன் மனைவிக்கிடையே விவாகரத்து ஏற்பட்டு பிரிந்து விட்டால் அவர்களுக்குப் பிறந்த குழந்தைகள் யாருடைய பொறுப்பில் இருக்க வேண்டும் என்பதற்கு இஸ்லாம் இரண்டு விதமான நிலைகளைக் கூறுகிறது.

1. குழந்தை பாலருந்தும் பருவத்தில் இருந்தால் தாய்தான் அக்குழந்தைக்கு மிகவும் உரிமை படைத்தவளாவாள். ஏனெனில் குழந்தைக்கு தாய்ப்பால் மிகவும் அவசியமான ஒன்றாகும். மேலும் பாலருந்தும் பருவத்தில் தாயினுடைய கவனிப்பில் இருப்பதுதான் குழந்தையினுடைய உடல் நலத்திற்கு மிகவும் பாதுகாப்பானதாகும். இதனை பின்வரும் ஹதீஸிலிருந்து நாம் விளங்கிக் கொள்ளலாம்.

ஒரு பெண்மணி " அல்லாஹ்வின் தூதரே என்னுடைய இந்த மகனுக்கு என்னுடைய வயிறுதான் (உணவுப்) பாத்திரமாகும். என்னுடைய மார்பகங்கள்தான் அவனுக்கு குடிபானமாகும். என்னுடைய மடிதான் அவனுக்கு தங்குமிடமாகும். இவனுடைய தந்தை என்னை விவாகரத்து செய்து விட்டு என்னிடமிருந்து இவனை பிரித்துக் கொண்டு செல்ல நாடுகிறார்." என்று (நபி (ஸல்) அவர்களிடம்) கூறினார். நபியவர்கள் " நீ (மறு) திருமணம் செய்யாமலிருக்கும் வரை நீதான் (குழந்தையாகிய) அவனுக்கு மிகவும் உரிமைபடைத்தவள்" என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அமர் (ரலி)**

**நூல் : ஹாகிம் பாகம் : 2 பக்கம் 225**

பெண் மறுமணம் செய்துவிட்டால் அக்குழந்தையை தந்தை தன் பொறுப்பில் எடுத்துக்கொள்வார். இந்த செய்தியில் நீ மறுமணம் செய்யாமல் இருக்கும்வரை என்ற நபிகளாரின் சொல் இச்சட்டத்தை உணர்த்துகிறது.

2. குழந்தை பாலருந்தும் பருவத்தைக் கடந்து விட்டால் குழந்தைக்கு, தாயிடம் இருக்க வேண்டுமா? அல்லது தந்தையிடம் இருக்க வேண்டுமா? என்று தீர்மானிக்கின்ற விருப்பத்தை இஸ்லாம் வழங்குகிறது. இதனை பின்வரும் ஹதீஸ்களிலிருந்து நாம் விளங்கிக் கொள்ளலாம்.

ராபிஃவு பின் ஸினான் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை தழுவினார்கள். அவருடைய மனைவி இஸ்லாத்தை தழுவ மறுத்தாள். (அவர்களுக்கு) பால்குடி மறந்த அல்லது அதற்கு ஒத்த நிலையில் (ஒரு பெண் குழந்தை ) இருந்தது. அப்பெண் நபி (ஸல்) அவர்களிடம் வந்து "என்னுடைய மகள்" என்றாள் . ராபிஃவு (ரலி) அவர்கள் "என்னுடைய மகள்" என்றார். நபி(ஸல்) அவரை "ஒரு மூலையில் உட்காருமாறு கூறினார்கள். அப்பெண்ணையும் ஒரு மூலையில் உட்காருமாறு கூறினார்கள். அக்குழந்தையை இருவருக்கும் மத்தியில் வைத்து பிறகு "நீங்கள் இருவரும் அதை அழையுங்கள் என்று கூறினார்கள். அக்குழந்தை தாயின் பக்கம் சென்றது. நபியவர்கள் அல்லாஹ்வே இக்குழந்தைக்கு நேர்வழிகாட்டு என்று கூறினார்கள். அக்குழந்தை தந்தையின் பக்கம் சென்றது. அவர் அக்குழந்தையை எடுத்துக் கொண்டார்

**அறிவிப்பவர் : ஜஃஃபர் பின் அப்தில்லாஹ் (ரஹ்)**

**நூல் : அபூதாவூத் (1916)**

இந்த ஹதீஸிலிருந்து குழந்தை பால் குடிப்பருவத்தை கடந்து விட்டதென்றால் அதனுடைய விருப்பப்படி தாயையோ அல்லது தந்தையையோ தேர்ந்தெடுக்கும்படி செய்யவேண்டும் என்பதை நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

நபியவர்கள் ஒரு சிறுவனுக்கு தாய் மற்றும் தந்தை இருவருக்கு மத்தியில் (யாருடன் வசிக்க அவன் விரும்புகிறானோ அவரை) தேர்ந்தெடுக்கும் உரிமையளித்தார்கள்

**அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)**

**நூல் : திர்மிதி (1277)**

இந்த ஹதீஸில் வந்துள்ள "சிறுவன்" என்ற வார்த்தைக்கு அரபி மூலத்தில் "குலாம்" என்ற சொல் வந்துள்ளது. இது குழந்தை பருவம் முதல், பருவ வயதை அடைகின்ற வரை உள்ள நிலையில் உள்ளவர்களுக்கும் பயன்படுத்தப்படும் சொல்லாகும். இதிலிருந்து பால்குடிப் பருவம் கழிந்ததிலிருந்து பருவ வயதை அடையும் நிலையிலுள்ள குழந்தைகளின் விருப்பத்தைப் பொருத்தே அது தாயிடம் இருக்க வேண்டுமா? அல்லது தந்தையிடம் இருக்க வேண்டுமா? என்று முடிவு செய்யப்படும். குழந்தை யாரை விரும்புகிறதோ அவர்களிடம்தான் அது ஒப்படைக்கப்படும்.

ஆனால் மேற்கூறப்பட்ட இரண்டு நிலைகளும் விவாகரத்துச் செய்யபட்ட குழந்தையின் தாய் மறுமணம் செய்யாமலிருக்கும் வரைதான். அவள் மறுமணம் செய்து விட்டால் குழந்தைகளின் பொறுப்பு தந்தைக்கு வந்துவிடும். இதனை

" நீ (மறு) திருமணம் செய்யாமலிருக்கும் வரை நீதான் (குழந்தையாகிய) அவனுக்கு மிகவும் உரிமைபடைத்தவள்" என்று நபியவர்கள் கூறியிருப்பதிலிருந்தே நாம் விளங்கிக் கொள்ளலாம்.

தாய் மறுமணம் முடித்துவிட்டால் குழந்தைகளின் பொறுப்பு தந்தையிடம் வந்துவிடுகிறது. என்றாலும் தாய்க்கும் அக்குழந்தைகளின் விஷயத்தில் உரிமையிருப்பதால் தாய் குழந்தைகளைச் சந்திக்கவிடாமல் தடுப்பதோ, தாயைப் பற்றி குழந்தைகளிடத்தில் வெறுப்பு உண்டாக்குவதோ கூடாது. தாய் தான் பெற்றெடுத்த குழந்தைகளைச் சந்திப்பதற்கு முழு உரிமையிருக்கிறது.

மேலும் குழந்ததைகள் தாயிடம் இருந்தாலும் தந்தையிடம் இருந்தாலும் அதற்குச் செலவு செய்கின்ற பொறுப்பு தந்தையைச் சார்ந்ததாகும். பின் வரும் திருமறை வசனத்திலிருந்த அதனை நாம் விளங்கிக் கொள்ளலாம்.

பாலூட்ட வேண்டும் என்று விரும்புகிற (கண)வனுக்காக (விவாக ரத்துச் செய்யப்பட்ட) தாய்மார்கள் தமது குழந்தைகளுக்கு முழுமையாக இரண்டு ஆண்டுகள் பாலூட்ட வேண்டும். அவர்களுக்கு நல்ல முறையில் உணவும் உடையும் வழங்குவது குழந்தையின் தந்தைக்குக் கடமை. சக்திக்கு உட்பட்டே தவிர எவரும் சிரமம் தரப்பட மாட்டார். பெற்றவள் தனது பிள்ளையின் காரணமாகவோ, தந்தை தனது பிள்ளையின் காரணமாகவோ சிரமம் கொடுக்கப்பட மாட்டார்கள். (குழந்தையின் தந்தை இறந்து விட்டால்) அவரது வாரிசுக்கு இது போன்ற கடமை உண்டு.

**அல் குர்ஆன் (2: 233)**

**ஜீவனாம்சம்**

கணவன் மனைவியை விவாகரத்துச் செய்தபின் மாதம் மாதம் மனைவிக்கு கணவன் செலவுத் தொகை வழங்குவதை ஜீவனாம்சம் என்று குறிப்பிடுகின்றனர். இஸ்லாம் இந்த ஜீவனாம்சத்தை அங்கீகரிக்கவில்லை. மாறாக பெண்களின் நலனுக்காக இதைவிட சிறந்த வேறு இரு பாதுகாப்புகளை வழங்கியுள்ளது.

**முதல் பாதுகாப்பு**

பெண் மணமுடிக்கும் போதே கணவனிடம் தான் விரும்பும் தொகையை கேட்டுப் பெற்றுக்கொள்ள வேண்டும். இதை இஸ்லாம் மஹர் எனக் குறிப்பிடுகின்றது. கணவன் விவாகரத்துச் செய்தபின் இந்தத் தொகையை பெண் திருப்பித்தர வேண்டிய அவசியமில்லை.

**இரண்டாவது பாதுகாப்பு**

கணவன் தான் விவாகரத்துச் செய்த பெண்ணுக்கு தன் சக்திக்கு ஏற்ப ஒரு தொகையை வழங் வேண்டும். அவன் தரமறுத்தால் ஜமாத் தலைவர் அதை அவனிடமிருந்து வாங்கித்தர வேண்டும். அவன் விவாகரத்துச் செய்ததற்காக இந்தத் தொகையை அவன் வழங்க வேண்டும். பின்வரும் குர்ஆன் வசனங்களில் இது வலியுறுத்தப்படுகின்றது.

விவாகரத்துச் செய்யப்பட்ட பெண்களுக்கு நல்ல முறையில் வசதிகள் அளிக்கப்பட வேண்டும். (இறைவனை) அஞ்சுவோருக்கு இது கடமை.

**அல்குர்ஆன் (2 : 241)**

அவர்களைத் தீண்டாத நிலையிலோ, அவர்களுக்கென மஹர் தொகையை முடிவு செய்யாத நிலையிலோ விவாகரத்துச் செய்வது உங்களுக்குக் குற்றமில்லை. வசதி உள்ளவர் தமக்குத் தக்கவாறும், ஏழை தமக்குத் தக்கவாறும் சிறந்த முறையில் அவர்களுக்கு வசதிகள் அளியுங்கள்! இது நன்மை செய்வோர் மீது கடமை.

**அல்குர்ஆன் (2 : 236)**

“இவ்வுலக வாழ்வையும், இதன் அலங்காரத்தையும் நீங்கள் விரும்பினால் வாருங்கள்! உங்களுக்கு வசதியளித்து அழகிய முறையில் உங்களை விடுவித்து விடுகிறேன்” என்று நபியே (முஹம்மதே!) உமது மனைவியரிடம் கூறுவீராக!

**அல்குர்ஆன் (33 : 28)**

### விவாகரத்துச் செய்த ஆணின் கடமைகள்

கணவன் மனைவியை விவாகரத்துச் செய்த உடன் அவளை தாயின் வீட்டிற்கு அனுப்பிவிடக்கூடாது. தான் வசிக்கும் இடத்திலேயே அவளும் வசிப்பதற்கு இடமளிக்க வேண்டும். இத்தா காலம் முடிவடையும் வரை உணவு போன்ற அவளுடைய அவசியத் தேவைகளை நிவர்த்திசெய்ய வேண்டும்.

முதல் தலாக் இரண்டாவது தலாக் ஆகிய தலாக்குகளின் போதே ஒரு ஆண் தன் மனைவியை மறுபடியும் மீட்டிக்கொள்ள முடியும். எனவே இவ்விரு தலாக்குகளுக்குப் பிறகு இத்தா இருக்கும் பெண்ணிற்கு இந்த வசதியை ஆண் ஏற்படுத்திக்கொடுக்க வேண்டும். மூன்றாவது தலாக்கிற்குப் பிறகு அவன் அவளை மறுபடியும் திரும்ப அழைத்துக்கொள்ள முடியாது. இந்த சந்தர்ப்பத்தில் இத்தாவிலிருக்கும் பெண்ணிற்கு அவன் இந்த ஏற்பாடுகளை செய்துதர வேண்டிய அவசியமில்லை.

தலாக் விடப்பட்ட பெண் கணவன் வீட்டில் தங்குவதை விரும்பாவிட்டால் அவள் தாயின் வீட்டிற்குச் செல்வது தவறல்ல. அப்பெண் கற்பிணியாக இருந்தால் அவள் குழந்தையை பெற்றெடுக்கும் வரை அவளுக்கு அவன் செலவளிக்க வேண்டும்.

அவள் இவனுடைய குழந்தைக்கு பால்புகட்டினால் இதற்காக ஒரு குறிப்பிட்ட நியாயமானத் தொகையை அவளுக்கு அவன் கொடுக்க வேண்டும். பின்வரும் வசனங்களில் இதை அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான்.

உங்கள் வசதிக்கேற்ப அவர்களை நீங்கள் குடியிருக்கும் இடத்தில் குடியமர்த்துங்கள்! அவர்களுக்கு நெருக்கடியை ஏற்படுத்தி அவர்களுக்குத் தீங்கு செய்யாதீர்கள்! அவர்கள் கர்ப்பிணிகளாக இருந்தால் அவர்கள் பிரசவிக்கும் வரை அவர்களுக்காகச் செலவிடுங்கள்! உங்களுக்காக அவர்கள் பாலூட்டினால் அவர்களுக்குரிய கூலிகளை அவர்களுக்கு வழங்கிவிடுங்கள்! உங்களுக்கிடையே நல்ல முறையில் (இது பற்றி) முடிவு செய்து கொள்ளுங்கள்! ஒருவருக்கொருவர் (இதைச்) சிரமமாகக் கருதினால் அவருக்காக இன்னொருத்தி பாலூட்டட்டும்.

**அல்குர்ஆன் (65 : 6)**

பாலூட்ட வேண்டும் என்று விரும்புகிற (கண)வனுக்காக (விவாக ரத்துச் செய்யப்பட்ட) தாய்மார்கள் தமது குழந்தைகளுக்கு முழுமையாக இரண்டு ஆண்டுகள் பாலூட்ட வேண்டும். அவர்களுக்கு நல்ல முறையில் உணவும் உடையும் வழங்குவது குழந்தையின் தந்தைக்குக் கடமை. சக்திக்கு உட்பட்டே தவிர எவரும் சிரமம் தரப்படமாட்டார். பெற்றவள் தனது பிள்ளையின் காரணமாகவோ, தந்தை தனது பிள்ளையின் காரணமாகவோ சிரமம் கொடுக்கப்பட மாட்டார்கள். (குழந்தையின் தந்தை இறந்து விட்டால்) அவரது வாரிசுக்கு இது போன்ற கடமை உண்டு.

**அல்குர்ஆன் (2 : 233)**

இவனுடைய குழந்தைகள் அவளிடம் இருந்தால் குழந்தைகளின் செலவுகளுக்காக ஒரு தொகையை அவன் அவளுக்கு வழங்க வேண்டும்.

## பெண்களுக்கு சொத்துரிமை உண்டா?

இஸ்லாத்தில் பெண்களுக்கு சொத்துரிமை வழங்கப்பட்டிருக்கிறது. ஆணுக்கு இரண்டு பங்கும் பெண்ணிற்கு ஒரு பங்கும் சொல்லப்பட்டிருக்கிறது. பெண்களுக்கு சொத்தில் எதையும் கொடுக்காமல் ஆண்களே அனைத்தையும் எடுத்துக்கொண்டிருந்த காலக்கட்டத்தில் இப்படியொரு அற்புத சட்டத்தை குர்ஆன் வழக்கில் கொண்டுவந்தது.

குறைவாக இருந்தாலும், அதிகமாக இருந்தாலும் பெற்றோரும், உறவினர்களும் விட்டுச் சென்றவற்றில் ஆண்களுக்கும் பங்கு உண்டு. பெற்றோரும் உறவினர்களும் விட்டுச் சென்றவற்றில் பெண்களுக்கும் பங்கு உண்டு. இப்பங்கீடு கட்டாயக் கடமை.

**அல்குர்ஆன் (4 : 7)**

“இரண்டு பெண்களின் பாகம் போன்றது ஓர் ஆணுக்கு உண்டு” என்று உங்கள் பிள்ளைகள் விஷயத்தில் அல்லாஹ் வலியுறுத்துகிறான்.

**அல்குர்ஆன் (4 : 11)**

வாரிசுரிமைச் சட்டத்தில் ஆண்களுக்குக் கிடைப்பதில் பாதி, பெண்களுக்குக் கிடைக்கும் என்று திருக்குர்ஆன் கூறுவதைப் பலரும் தவறாக எண்ணுகின்றனர். தக்க காரணங்களுடன் தான் இஸ்லாம் பாரபட்சம் காட்டுகிறது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

1, இஸ்லாமிய சமூக, குடும்ப அமைப்பில் பெண்களை விட ஆண்கள் மீது தான் அதிகச் சுமை சுமத்தப்பட்டுள்ளது. மற்ற சமூகங்களிலும் கூட பெரும்பாலும் இதே நிலை தான்.

2, பெற்றோர்கள் தள்ளாத வயதில் ஆண் மக்களால் தான் பராமரிக்கப்படுகின்றனர். பெண்கள் தமது கணவனின் பெற்றோர்களைத் தான் பராமரிக்க முடியும். பெற்றோர் பொருள் திரட்ட முடியாத நிலையை அடையும் போது அவர்களைக் கவனிப்பதும் மகன்கள் தான். எனவே அவர்களுக்கு இரு மடங்கு அளிப்பது நியாயமே!

3, ஒரு பெண் தனது புகுந்த வீட்டில் வாழ முடியாத நிலை ஏற்பட்டால் தனது சகோதரனின் தயவில் வாழும் நிலை ஏற்படும். “எனக்குக் கிடைத்த அளவு சொத்து உனக்கும் தானே கிடைத்தது; எனவே உன்னை நான் ஏன் பராமரிக்க வேண்டும்” என்று சகோதரன் நினைக்காமல் அன்புடன் அவளை அரவணைக்க இந்தப் பாரபட்சம் அவசியமாகிறது.

4, தந்தையின் சொத்துக்களைப் பெருக்குவதில் பெண்களை விட ஆண்களே பெரிதும் பங்காற்றி வருகின்றனர். தந்தை விட்டுச் சென்ற சொத்துக்களில் அவர் சம்பாதித்ததை விட அவரது மகன்களின் உழைப்பால் அதிகம் பெருகியிருக்கும். மகள் பெரும்பாலும் சொத்தை வளர்ப்பதில் பங்கெடுக்க மாட்டாள். இதுவும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டும்.

5, இவை தவிர பெண்களுக்காக தந்தை நகை மற்றும் ஆபரணங்களைச் செய்து போடுகிறார். இது அலங்காரப் பொருள் மட்டுமின்றி பெரிய சொத்தாகவும் உள்ளது. இது போன்ற பொருட்களை ஆண் மக்களுக்காக தந்தை வழங்குவதில்லை. இதுவும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டும்.

6, ஆண்களுக்கும், பெண்களுக்கும் சமமான சொத்துரிமை வழங்கினால், பெற்றோரை முதிய வயதில் நாம் மட்டும் ஏன் கவனிக்க வேண்டும் என்ற சிந்தனை ஆண் மக்களுக்குத் தோன்றும். புகுந்த வீட்டில் வாழும் பெண்களால் பெற்றோரைக் கவனிக்க முடியாமல் போகும்.

இதனால் முதியோர் இல்லம் தான் பெருகும். பெற்றோர் நாதியற்று விடப்படுவார்கள். இவற்றையெல்லாம் கவனத்தில் கொண்டே இஸ்லாம் இதில் பாரபட்சம் காட்டியுள்ளது.

**பெண்கள் கடைத்தெருக்களுக்குச் செல்லலாமா?**

எந்தத் தேவையும் இல்லாமல் பெண்கள் கடைத்தெருக்களில் சுற்றித்திரியக்கூடாது.

உங்கள் வீடுகளிலேயே தங்குங்கள்! முந்தைய அறியாமைக் காலத்தில் வெளிப்படுத்தித் திரிந்தது போல் திரியாதீர்கள்! தொழுகையை நிலை நாட்டுங்கள்! ஸகாத்தைக் கொடுங்கள்! அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் கட்டுப்படுங்கள்! இவ்வீட்டினராகிய உங்களை விட்டு அசுத்தத்தை நீக்கவும், உங்களை முழுமையாகப் பரிசுத்தப் படுத்தவுமே அல்லாஹ் நாடுகிறான்.

**அல்குர்ஆன் (33 : 33)**

அறியாமைக்காலத்தில் வெளியில் சுற்றித்திரிந்ததைப் போல் சுற்றித்திரியக்கூடாது என்று நான் உன்னிடத்தில் உறுதிப்பிரமாணம் வாங்கிக்கொள்கிறேன் என்று நபி (ஸல்) அவர்கள் உமைமா பின்த் ருகைகா (ரலி) அவர்களிடம் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அம்ர் பின் ஆஸ் (ரலி)**

**நூல் : அஹ்மத் (6554)**

பெண் மறைக்கப்பட வேண்டியவள். அவள் வெளியே சென்றால் (வழிகெடுப்பதற்காக) ஷைத்தான் அவளை நோக்கிவந்துவிடுகிறான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு மஸ்ஊத் (ரலி)**

**நூல் : திர்மிதி (1093)**

மாாக்க விளக்கப் பொதுகூட்டங்கள் திருமணங்கள் உரிமையை மீட்டெடுப்பதற்கு உதவும் போராட்டங்கள் போன்ற நல்ல காரியங்களுக்காகவும் தேவையான விஷயங்களுக்காகவும் செல்வதில் தவறில்லை. அவ்வாறு செல்லும் போது பர்தாவை முழுமையாக கடைபிடித்துச் செல்ல வேண்டும்.

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் பெண்கள் போர்க்களத்திற்கு வந்து காயம்பட்ட போர்வீரர்களுக்கு மருத்துவம் செய்யும் பணியை செய்திருக்கிறார்கள். பெருநாள் திடலுக்கு வந்து நன்மையான காரியத்தில் கலந்துகொண்டார்கள்.

(பெண்களாகிய) நாங்கள் நபி (ஸல்) அவர்களின் காலத்தில் நடந்த போர்களில் காயமுற்றவர்களுக்கு மருந்திடுவோம்; நோயாளிகளைக் கவனித்தோம். நான் நபி (ஸல்) அவர்களிடம் “எங்களில் ஒரு பெண்ணுக்கு மேலங்கி இல்லாவிட்டால் (பெருநாள் தொழுகைக்குச்) செல்லாமல் (வீட்டிலேயே இருப்பது) குற்றமா?” என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் “(ஒரு பெண்ணிடம் மேலங்கி இல்லாவிட்டால்) அவளுடைய தோழி தனது மேலங்கிகளில் ஒன்றை அவளுக்கு அணியக் கொடுக்கட்டும்! அவள் நன்மையான காரியங்களிலும் இறைநம்பிக்கையாளர்களின் பிரசாரங்களிலும் கலந்து கொள்ளட்டும்!” என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : உம்மு அதிய்யா (ரலி)**

**நூல்: புகாரி (324)**

பர்தா அணிவது சட்டமாக்கப்பட்ட பின்னால், தம் தேவைக்காக வேண்டி நபி (ஸல்) அவர்களின் துணைவியாரானன சவ்தா பின்த் ஸம்ஆ (ரலி) அவர்கள் வெளியே சென்றார்கள். அவர்கள், (உயரமான) கனத்த சரீரமுடைய பெண்மணியாக இருந்தார்கள். அவர்களை அறிந்தவர்களுக்கு அவர்கள் யார் என்று (அடையாளம்) தெரியாமலிருக்காது. அவர்களை அப்போது, உமர் பின் கத்தாப் (ரலி) அவர்கள் பார்த்துவிட்டு “சவ்தாவே, அல்லாஹ்வின் மீதாணையாக, நீஙகள் யார் என்று எங்களுக்குத் தெரியாமலில்லை. நீங்கள் (யார் என்று அடையாளம் தெரிகின்ற வகையில்) எப்படி வெளியே வந்திருக்கிறீர்கள் பாருங்கள்!” என்று சொன்னார்கள். சவ்தா (ரலி) அவர்கள் உடனே அங்கிருந்து திரும்பி விட்டார்கள். சவ்தா (ரலி) அவர்கள் வீட்டினுள் வந்து, “அல்லாஹ்வின் தூதரே! நான் என் தேவை ஒன்றிற்காக வெளியே சென்றேன். உமர் (ரலி) அவர்கள் என்னிடம் இவ்வாறெல்லாம் சொன்னார்கள்” என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ், நபி (ஸல்) அவர்களுக்கு ‘வஹீ’ (வேதவெளிப்பாடு) அறிவித்தான். பிறகு அந்நிலை அவர்களை விட்டு நீக்கப்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள் “நீங்கள் உங்கள் தேவைக்காக வெளியே செல்லலாம் என்று உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது” என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (4795)**

**தனியாக பயணம் செய்யலாமா?**

பெண் திருமணம் முடிக்கத் தடைசெய்யப்பட்ட இரத்தபந்த உறவினர் இன்றி தனியே பயணம் செய்வதை நபி (ஸல்) அவர்கள் தடைசெய்துள்ளார்கள். இது தொடர்பாக வரும் அறிவிப்புகளில் தூர அளவு வேறுபட்டிருந்தாலும் அனைத்து அறிவிப்புகளும் தனியே பயணம் செய்யக்கூடாது என்பதையே வலியுறுத்துகின்றன.

அரை நாள் பயணம் ஒரு நாள் பயணம் இரு நாள் பயணம் மூன்று நாள் பயணம் ஆகிய தூரங்களில் ஒரு பெண் தனியே பயணம் செய்யக்கூடாது என ஹதீஸ்களில் கூறப்பட்டுள்ளது. இவற்றில் குறைந்தபட்ச அளவான அரை நாள் பயண தூரத்தை நாம் எடுத்துக்கொள்வதே பேணுதலானது. சரியானது.

அரை நாள் நடைப்பயணமாக சென்றால் எவ்வளவு தொலைவு செல்ல முடியுமோ அந்தத் தொலைவை பரீத் என ஹதீஸில் கூறப்படுகின்றது. இது சுமார் 20 கிமீ தூரமாகும். அரை நாள் பயணம் செய்யக்கூடாது என்றால் இதனுள் ஒரு நாள் இரு நாள் மூன்று நாள் தூரம் பயணம் மேற்கொள்ளக்கூடாது என்ற கருத்தும் அடங்கியுள்ளது.

திருமணம் முடிக்கத் தடைசெய்யப்பட்ட இரத்தபந்த உறவு இல்லாமல் முஸ்லிமான பெண் ஒரு பரீத் (அரை நாள்) தொலைதூரம் தனியே பயணிப்பது அவளுக்கு ஆகுமானதல்ல என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : அபூதாவுத் (1465)

அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பக் கூடிய எந்தப் பெண்ணும் ஒரு பகல் ஓர் இரவு தொலைவுடைய பயணத்தை (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய ஆண் உறவினர் உடன் இல்லாமல் (தனியாகப்) பயணம்மேற்கொள்ள வேண்டாம்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : புகாரி (1088)**

ஒரு பெண் கணவனோ (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய உறவினரோ உடன் இல்லாமல் இரண்டு நாட்கள் தொலைவுக்கு பயணம் செய்யக் கூடாது என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அபூசயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : புகாரி (1197)**

எந்தப் பெண்ணும் மணம் முடிக்கத் தகாத நெருங்கிய ஆண் உறவினர் உடன் இல்லாமல் (தனியாக) மூன்று நாட்களுக்கான பயணம் மேற்கொள்ள வேண்டாம் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**

**நூல் : புகாரி (1086)**

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் இன்ன புனிதப் போரில் கலந்து கொள்வதாக (ராணுவ வீரர்கள் பட்டியலில்) எனது பெயர் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆனால்,என் மனைவி ஹஜ் செய்ய விருக்கிறாள்" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், "நீ திரும்பிச் சென்று உன் மனைவியுடன் ஹஜ் செய்" என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)**

**நூல் : புகாரி (3061)**

பாதுகாப்பான சூழ்நிலைகளில் ஒரு பெண் தனியே பயணம் செய்யலாம் என்ற கருத்தை சிலர் தற்போது கூறிவருகின்றனர். இது மேற்கண்ட நபிமொழிகளுக்கு எதிரான கருத்தாகும். இந்த தவறானத் தீர்ப்பிற்கு இவர்கள் பின்வரும் செய்தியை ஆதாரமாக காட்டுகின்றனர்.

நான் நபி (ஸல்) அவர்களிடம் இருந்த போது ஒரு மனிதர் அவர்களிடம் வந்து (தன்னுடைய) வறுமை நிலை பற்றி முறையிட்டார். பிறகு மற்றொருவர் அவர்களிடம் வந்து, வழிப்பறி பற்றி முறையிட்டார். உடனே, நபி (ஸல்) அவர்கள், "அதீயே! நீ 'ஹீரா'வைப் பார்த்ததுண்டா?" என்று கேட்டார்கள். "நான் அதைப் பார்த்ததில்லை. ஆனால், அது பற்றி எனக்கு சொல்லப்பட்டிருக்கிறது" என்று பதிலளித்தேன். அவர்கள், "நீ நீண்ட நாள் வாழ்ந்தால், நீ நிச்சயம் பார்ப்பாய். ஒட்டகச் சிவிகையில் அமர்ந்திருக்கும் ஒரு பெண் இறையில்லம் கஅபாவை தவாஃப் செய்வதற்காக (வலம் வருவதற்காக)ப் பயணித்து ஹீராவிலிருந்து வருவாள். அவள் (வழியில்) அல்லாஹ்வைத் தவிர வேறெவருக்கும் அஞ்ச மாட்டாள்" என்று சொன்னார்கள்.

**அறிவிப்பவர் : அதீ பின் ஹாதம் (ரலி)**

**நூல் : புகாரி (3595)**

இச்செய்தியில் ஒரு பெண் தனியாகப் பயணம் செய்து கஃபாவை தவாஃப் செய்வாள் என நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். எனவே பாதுகாப்பான சூழ்நிலையில் பெண் தனியே பயணம் செய்யலாம் எனக் கூறுகின்றனர்.

பெண்கள் தனியே பயணம் செய்யலாமா? செய்யக்கூடாதா? என்ற சட்டத்தை தெளிவுபடுத்துவது இந்த ஹதீஸின் மையக்கருத்தல்ல. இஸ்லாம் வளர்ச்சியடைந்து நாட்டில் பாதுகாப்பான சூழ்நிலை நிலவும் என்பதே இதன் சாராம்சமாகும். ஆனால் முன்பு நாம் சுட்டிக்காட்டிய ஹதீஸ்கள் அனைத்தும் பெண்கள் தனியே பயணம் செய்வதை குறித்து பிரத்தேயகமாக அறிவிக்கப்பட்டவையாகும்.

இந்த செய்தியில் கூறப்படும் பெண்ணுக்கு மஹ்ரமான துணை இருந்ததா? இல்லையா? என்பது பற்றி எந்தத் தகவலும் இல்லை. தனக்கு மஹ்ரமான துணை எதுவும் இல்லாத காரணத்தால் கஃபாவை தரிசிக்க வேண்டும் என்ற ஆவலில் இப்பெண் இவ்வாறு பயணம் செய்திருக்கலாம். அல்லது தனியே பயணம் செய்யக்கூடாது என்ற சட்டத்தை அவர் அறியாமல் இருந்திருக்கலாம். இது நமக்குத் தேவையில்லை, இதிலிருந்து பல ஹதீஸ்களுக்கு எதிரான சட்டத்தை நாம் எடுப்பது சரியல்ல.

ஒரு பேச்சிற்கு இதிலிருந்து சட்டம் எடுப்பதாக வைத்துக்கொண்டாலும் தற்போது பெண்கள் எந்த நாட்டிலிருந்தும் எந்த பகுதிக்கு வேண்டுமானாலும் பயணம் செய்யலாம் எனக் கூற முடியாது. ஏனெனில் இந்த செய்தியில் யமனிலிருந்து புறப்பட்டு கஃபாவை தவாஃப் செய்வதற்காக மக்காவிற்கு வருவாள் என்பது மட்டுமே சொல்லப்பட்டது.

**பெண்கள் பள்ளியில் இஃதிகாஃப் இருக்கலாமா?**

இஃதிகாஃப் என்பதற்கு தங்குதல் என்பது பொருள். இறையில்லத்தில் இறைவனை வணங்குவதற்காக மாத்திரம் தங்குவதற்கு இஃதிகாஃப் என்று சொல்லப்படுகிறது. இவ்வணக்கத்தை செய்பவர்கள் அவசியமானத் தேவைகளுக்குத் தவிர மற்ற விஷயங்களுக்கு பள்ளியை விட்டும் வெளியே செல்வதை தவிர்த்துக்கொள்ள வேண்டும்.

இஃதிகாஃப் இருக்கக்கூடியவர் நோயாளியை நலம் விசாரிப்பதற்கு (வெளியில்) செல்லாமல் இருப்பதும் ஜனாஸாவில் கலந்துகொள்ளாமல் இருப்பதும் பெண்னை தொடமல் இருப்பதும் அவளை கட்டியணைக்காமல் இருப்பதும் மிக அவசியமானவைகளுக்குத் தவிர மற்ற தேவைகளுக்கு வெளியில் செல்லாமல் இருப்பதும் நபிவழியாகும். நோன்புடனேத் தவிர (தனியாக) இஃதிகாஃப் கிடையாது. மக்கள் ஒன்றுசேருகின்ற பள்ளியிலேத் தவிர (வேறு இடத்தில்) இஃதிகாஃப் கிடையாது.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : அபூதாவுத் (2115)**

இஃதிகாஃப் இருப்பதற்கு நபி (ஸல்) அவர்களிடம் பெண்கள் அனுமதி கேட்ட போது நபி (ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள். எனவே பெண்கள் இஃதிகாஃப் இருக்கலாம்.

நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு ரமளானிலும் இஃதிகாஃப் இருப்பார்கள். சுப்ஹூத் தொழுததும் இஃதிகாஃப் இருக்கும் இடத்திற்குச் சென்றுவிடுவார்கள். அவர்களிடம் இஃதிகாஃப் இருப்பதற்கு நான் அனுமதி கேட்டேன். எனக்கு அவர்கள் அனுமதி அளித்தார்கள். அங்கே நான் ஒரு கூடாரத்தை அமைத்துக் கொண்டேன். இதைக் கேள்விப்பட்ட ஹஃப்ஸா (ரலி) ஒரு கூடாரத்தை அமைத்தார். இதனைக் கேள்விப்பட்ட ஸைனப் (ரலி) மற்றொரு கூடாரத்தை அமைத்துக்கொண்டார். நபி (ஸல்) அவர்கள் காலை தொழுகையை முடித்துவிட்டுத் திரும்பியபோது நான்கு கூடாரங்களைக் கண்டு, “இவை என்ன?” என்று கேட்டார்கள். அவர்களுக்கு விவரம் கூறப்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள், “இவ்வாறு செய்வதற்கு நற்செயல்புரியும் எண்ணம்தான் இவர்களைத் தூண்டியதா? இவர்கள் நன்மையைத்தான் நாடுகிறார்களா? இவற்றை நான் காண முடியாதவாறு அகற்றுங்கள்!” என்று சொன்னவுடன் அவை அகற்றப்பட்டன. நபி (ஸல்) அவர்கள் (அந்த வருடம்) ரமளானில் இஃதிகாஃப் இருக்காமல் ஷவ்வால் மாதத்தின் கடைசிப் பத்து நாட்களில் இஃதிகாஃப் இருந்தார்கள்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (2041)**

பள்ளியில் நெருக்கடி ஏற்படும் அளவில் அதிகமான கூடாரங்களை அமைத்துக்கொண்டதைத் தான் நபி (ஸல்) அவர்கள் கண்டித்துள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் அன்னாரின் துணைவியரில் ஒருவர் இஃதிகாஃப் இருந்தார். அப்போது அவர் குசும்பப்பூவின் நீரின் நிறத்தில் உதிரப்போக்கைக் காண்பவராக இருந்தார். அவர் தொழும்போது அவருக்குக் கீழே கையலம்பும் பாத்திரம் இருக்கும்.

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : புகாரி (310)**

அன்னிய ஆணுடன் எந்த ஒரு பெண்ணும் தனியாக இருக்கக்கூடாது என்பதால் இதைத் தவிர்க்க இஃதிகாஃப் இருக்கும் பெண்ணுக்குத் துணையாக இன்னொரு பெண்ணோ அல்லது மஹ்ரமான ஆணோ இஃதிகாஃப் இருப்பது நல்லது. அல்லது பெண்கள் பகுதிக்கு தனிப் பாதுகாப்பை பள்ளி நிர்வாகம் ஏற்படுத்திக் கொடுத்தால் இஃதிகாஃப் இருக்கலாம்.

### பெண்கள் மண்ணறைகளுக்குச் செல்லலாமா?

மரண பயத்தையும் மறுமை சிந்தனையையும் வரவழைத்துக் கொள்வதற்காக பெண்கள் மண்ணறைகளுக்குச் செல்வதற்கு அனுமதியுள்ளது. மண்ணறைகளுக்குச் செல்பவர்கள் ஓத வேண்டிய பிரார்த்தனையை நபி (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களுக்குக் கற்றுக்கொடுத்தார்கள்.

நான் "அல்லாஹ்வின் தூதரே! அ(டக்கத் தலங்களில் இருப்ப)வர்களுக்காக நான் என்ன சொல்ல வேண்டும்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அஸ்ஸலாமு அலா அஹ்லித் தியாரி மினல் முஃமினீன வல் முஸ்லிமீன். வ யர்ஹமுல்லாஹுல் முஸ்தக்திமீன மின்னா வல் முஸ்தஃகிரீன். வ இன்னா இன்ஷா அல்லாஹு பி(க்)கும் ல லாஹிகூன்" என்று சொல்" என்றார்கள்.

(பொருள்: அடக்கத் தலங்களில் உள்ள இறைநம்பிக்கையாளர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் சாந்தி பொழியட்டும்! நம்மில் முந்திச் சென்றுவிட்டவர்களுக்கும் பிந்தி வருபவர்களுக்கும் அல்லாஹ் கருணை புரிவானாக! நாம் அல்லாஹ் நாடினால் உங்களுக்குப் பின்னால் வந்து சேரக்கூடியவர்களாக உள்ளோம்.)

**அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (1774)**

அடக்கத் தலங்களைச் சந்தியுங்கள். ஏனெனில், அவை மரணத்தை நினைவூட்டும்!' என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (1777)**

அடக்கத்தலங்களை சந்திப்பதை விட்டும் உங்களை நான் தடுத்திருந்தேன். முஹம்மதுவிற்கு அவரின் தாயாருடைய அடக்கத்தலத்தை சந்திப்பதற்கு அனுமதி தரப்பட்டுவிட்டது. எனவே நீங்கள் மண்ணறைகளை

சந்தியுங்கள். அவை உங்களுக்கு மறுமையை நினைவூட்டும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : புரைதா (ரலி)**

**நூல் : திர்மிதி (974)**

மண்ணறைகளை ஜியாரத் செய்கிறோம் என்று கூறிக்கொண்டு சில பெண்கள் தர்ஹாக்களுக்குச் செல்கிறார்கள். தர்ஹாக்களில் இணைவைப்பு அறங்கேற்றப்படுவதாலும் மார்க்கம் தடை செய்த ஏராளமான அம்சங்கள் அங்கு நடைபெறுவதாலும் அங்கு ஆண்களாக இருந்தாலும் பெண்களாக இருந்தாலும் செல்வது கூடாது. பொது மையவாடிகளுக்குச் செல்லலாம்.

### கோ எஜுகேஷன் கூடுமோ?

கல்லூரிகளில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து ஒரே வகுப்பறையில் பயிலும் கல்வி முறைக்கு கோ எஜுகேஷன் என்று சொல்லப்படுகிறது. ஆணும் பெண்ணும் கல்வியை வளர்த்துக்கொள்வதற்கு இஸ்லாத்தில் பரிபூரண சுதந்திரம் உண்டு. ஆனால் கல்வி என்றப் பெயரில் ஒழுக்கங்கெட்டு நடப்பதைத் தான் இஸ்லாம் தடுக்கிறது.

கோ எஜுகேஷன் நடைமுறையில் உள்ள கல்லூரிகளில் ஆண்களும் பெண்களும் ஒருவரையொருவர் சந்தித்துக்கொள்வதும் கேளி கிண்டல் செய்வதும் காதலிப்பதும் வாடிக்கையாகி வருகிறது. இது ஒரு குற்றமாகக் கருதப்படுவது கிடையாது. இப்படிப்பட்ட இடங்களுக்கு நமது பெண்களை அனுப்பினால் அவர்களும் தவறான வழிக்கு சென்றுவிடுவார்களோ என்ற அச்சம் ஏற்படுகிறது.

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் ஆண்களும் பெண்களும் சபைகளில் கலந்துகொண்டிருக்கிறார்கள். ஆண்களின் பார்வை பெண்களின் மீது படாதவாறு ஆண்கள் முன்னாலும் பெண்கள் பின்னாலும் அமர்வார்கள். சபை களையும் போது பெண்கள் முதலில் களைந்து செல்வார்கள். பெண்கள் சென்றதற்குப் பிறகு ஆண்கள் செல்வார்கள். இப்படியொரு அருமையான வழிமுறையை நபி (ஸல்) அவர்கள் கடைபிடித்துள்ளார்கள்.

பெண்கள் பள்ளிவாசலுக்குச் செல்லலாமா என்ற தலைப்பின் கீழ் இதற்கான ஆதாரம் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்த வழிமுறையையும் இஸ்லாம் சொல்லும் ஒழுங்கு முறைகளையும் கல்லூரிகளில் கடைபிடித்தால் அங்கு சென்று தாராளமாக கற்கலாம். ஆனால் அப்படியொரு கல்லூரி கிடைக்காத பட்சத்தில் அல்லாஹ்விற்கு பயந்து இஸ்லாமிய ஒழுங்கு முறைகளை முழுமையாக கடைபிடித்து கல்லூரிக்குச் செல்வது தவறில்லை.

பெண்களுக்கென்று தனியாக கல்லூரிகள் இருந்தால் அங்கு சென்று படிப்பது சிறந்தது.

## பெண்கள் வேலைக்குச் செல்லலாமா?

பெண்கள் வேலைக்காக வெளியே செல்லும் போது அன்னிய ஆண்களுடன் தனித்திருக்க வேண்டிய நிலையும் அவர்களுடன் பழக வேண்டிய நிலையும் ஏற்படுகிறது. இதை இஸ்லாம் தடுத்திருக்கிறது. ஆண்களால் பெண்கள் அதிகமாக ஏமாற்றப்பட்டு வருகிறார்கள் என்பதை கண்கூடாக பார்க்கிறோம்.

யாருடைய உதவியும் இல்லாமல் தனியாக ஓரிடத்திற்குச் செல்லும்போது அவளது கற்புக்கு பாதுகாப்பற்றுப் போய்விடுகிறது. இதையெல்லாம் கவனித்தில் வைத்துப் பார்க்கும் போது வெளியிடங்களுக்கு வேலைக்குச் செல்லாமல் இருப்பதே சிறந்தது என்று தெரிகிறது.

தான் வேலைக்குச் செல்லக்கூடிய இடம் மார்க்கத்தின் வரம்புகளை மீறுவதற்கான சூழ்நிலைகள் அற்ற இடமாகவும் தன் கற்புக்கு பாதுகாப்பான இடமாகவும் இருந்தால் மேலும் அவ்வாறு வேலைக்குச் செல்வது மிக அவசியமானதாகவும் இருந்தால் வேலைக்குச் செல்வதில் தவறில்லை.

பெண்கள் வெளியில் செல்லாமல் வீடுகளிலே இருந்து வேலை செய்து சம்பாரிப்பதில் தவறில்லை. இது தான் அவர்களுக்கு சிறந்ததாகவும் உள்ளது.

மேலதிகமான விபரங்களை அறிய பெண்கள் வெளியில் செல்லலாமா என்ற தலைப்பின் கீழ் சொல்லப்பட்ட செய்திகளை படித்துத் தெரிந்து கொள்க.

## ஒப்பாரி வைக்கக்கூடாது

துக்கம் மேலிடும் போது சப்தமிட்டு ஒப்பாரி வைப்பதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள். ஒப்பாரி வைக்கக்கூடாது என்று நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் உறுதிமொழி வாங்கினார்கள்.

**அறிவிப்பவர் : உம்மு அதிய்யா (ரலி)**

**நூல் : புகாரி (1306)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் மக்களிடத்தில் இரண்டு (கெட்ட பண்புகள்) உள்ளது. அவர்களிடத்தில் உள்ள அந்த இரண்டும் இறைநிராகரிப்பாகும். (ஒன்று) வம்சாவழியில் குறையை ஏற்படுத்துவதாகும். (மற்றொன்று) இறந்தவருக்காக ஒப்பாரி வைப்பதாகும்.

**அறிவிப்பவர் ; அபூஹுரைரா (ரலி)**

**நூல் : முஸ்லிம் (100)**

(துன்பத்தில்) கன்னங்களில் அறைந்துகொள்பவனும் சட்டைப் பைகளைக் கிழித்துக்கொள்பவனும் அறியாமைக்கால (மாச்சரியங்களுக்கு) அழைப்பு விடுப்பவனும் நம்மைச் சார்ந்தவன் அல்லன்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் (ரலி)**

**நூல் : புகாரி (1294)**

ஆனால் ஒப்பாரி வைக்காமல் கவலைப்பட்டாலோ சப்தமிடாமல் கண்ணீர் வடித்தாலோ குற்றமில்லை.

சஅத் பின் உபாதா (ரலி) நோயுற்றபோது நபி (ஸல்) அவர்கள், அப்துர்ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி), சஅத் பின் அபீவக்காஸ் (ரலி), அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) ஆகியோரோடு நோய் விசாரிக்கச் சென்றார்கள். வீட்டில் நுழைந்தபோது (சஅத் பின் உபாதாவின்) குடும்பத்தினர் அவரைச் சூழ்ந்திருப்பதைக் கண்டதும், " என்ன? இறந்துவிட்டாரா?" எனக் கேட்டார்கள். "இல்லை, அல்லாஹ்வின் தூதரே!" என்றனர். நபி (ஸல்) அவர்கள் அழலானார்கள். அவர்களின் அழுகையைக் கண்ட மக்களும் அழத்தொடங்கினர். பின் நபி (ஸல்) அவர்கள், "(மக்களே!) நீங்கள் (செவி சாய்த்துக்) கேட்க மாட்டீர்களா? நிச்சயமாகக் கண்கள் அழுவதாலும் உள்ளம் கவலை கொள்வதாலும் அல்லாஹ் தண்டிப்பதில்லை- பின்பு, தம் நாவின் பால் சைகை செய்து- எனினும் இதன் காரணமாகத்தான் தண்டனையோ அருளோ வழங்குகிறான்.

உமர் (ரலி) அவர்கள் ஒப்பாரி வைப்பவர்களைக் கண்டால் கம்பினால் அடிப்பார்கள்; கல்லெறிவார்கள். இன்னும் மண்வாரி வீசவும் செய்வார்கள்.

**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**

**நூல் : புகாரி (1304)**

கணவன் இறந்தால் நான்கு மாதம் பத்து நாட்கள் துக்கமாக இருக்கலாம். மற்றவர்கள் யார் இறந்தாலும் மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் அனுஷ்டிக்கக்கூடாது. மூன்று நாட்கள் கழிந்து விட்டால் சகஜ நிலைக்குத் திரும்பிவிட வேண்டும்.

நான், தமது சகோதரரை இழந்திருந்த ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களிடம் சென்றேன். அவர் நறுமணம் பூசிக்கொண்டு, "இது எனக்குத் தேவையில்லைதான்; ஆயினும் 'அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பக்கூடிய பெண் தனது கணவனைத் தவிர வேறு யாருடைய இறப்பிற்கும் மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்கக் கூடாது; தனது கணவன் இறந்துவிட்டால் நான்கு மாதங்களும் பத்து நாட்களும் துக்கம் கடைப்பிடிக்க வேண்டும்' என நபி (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீது நின்றவாறு கூற நான் கேட்டிருக்கிறேன்" என்றார்.

**அறிவிப்பவர் : ஸைனப் பின்த் அபீ ஸலமா (ரலி)**

**நூல் : புகாரி (1282)**

**பெண்கள் பிராணிகளை அறுக்கலாமா?**

பெண்கள் அறுப்பதற்கு எவ்வித தடையும் ஹதீஸ்களில் இல்லை. மேலும் நபி(ஸல்) அவர்கள், ஒரு பெண் அறுத்ததை அங்கீகரித்துள்ளார்கள்.

ஒரு பெண்மணி (கூர்மையான) கல்லால் ஆட்டை அறுத்து விட்டார். இது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டபோது அதை சாப்பிடும்படி கட்டளையிட்டார்கள்.

**அறிவிப்பவர் : கஅபு இப்னு மாலிக்(ரலி),**

**நூல் : புகாரி(5504)**

**இறுதியாக**

பெண்களுக்கு மாத்திரம் பிரத்யேகமான பல சட்டங்களை அறிந்துகொண்டோம். தொழும் முறை உளூ செய்யும் முறை தயம்மம் இன்னும் பல விஷயங்களில் ஆண்களுக்கு சொல்லப்பட்ட அனைத்து சட்டங்களும் பெண்களுக்கு பொருந்தும். ஏனென்றால் நபி (ஸல்) அவர்கள் பெண்களும் ஆண்களைப் போன்றவர்கள் தான் என்று கூறியுள்ளார்கள்.

பெண்கள் ஆண்களைப் போன்றவர்களாவார்கள்.

**அறிவிப்பவர் : உம்மு சுலைம் (ரலி)**

**நூல் : அஹ்மத் (25869)**

இவற்றைத் தெரிந்துகொள்ள நபிவழியில் தொழுகைச் சட்டங்கள் என்ற புத்தகத்தை வாங்கிப் படித்துக்கொள்ளுங்கள்.

**அல்லாஹ் மிக அறிந்தவன்.**